PARAPARAPU JOURNAL
பரபரப்பு ஜேர்னல்
ISSUE 125 MARCH 13 2009

# புலிகளைச் சிக்கவைக்க RAW

# கதை எப்படித் திருப்பப்படலாம்?

## இதோ.. இப்படித்தான்!

| | |
|---|---|
| கனடா-டொலர் | 3.50 |
| பிரிட்டன்-பவுன்ட்ஸ் | 2.00 |
| பிரான்ஸ்-யூரோ | 3.00 |
| சுவிஸ்-பிராங்க் | 5.00 |
| ஜேர்மனி-யூரோ | 4.00 |
| அவுஸ்திரேலியா-டொலர் | 5.00 |
| நோர்வே-குரோனர் | 32.00 |
| டென்மார்க்-குரோனர் | 30.00 |

**PARAPARAPU JOURNAL TEAM**

Overseas Distribution

Australia
Lingam
France
T.Rameswaran
Norway
Selva
Swiss
A.Varathan
U.K.
N.T.Navaneethan

Creation Team

Production Advisor
Sydney Karan
Type Setting
Karthik, Ram
Advertising
Kannan
Marketing Manager
Nimalini Rasa
Layout Design
Team Alpha Canada
Associate Editor
Shiamini Kandiah
Chief Executive
Joethn Kandiah
**Published By**
**Team Alpha Canada**

**Editor-in-Chief**
**Rishie**



**Paraparapu Weekly**
**P.O.Box 171, 21 Main Street Markham, Ontario. L3P 3J7, Canada.**
**Phone: 416-548-8060 Fax: 416-548-8061**
**E-Mail: info@paraparapuweekly.com**












இலங்கையில் ஸ்டாண்டர்ட் செய்தித்தாள் நிறுவனத்துக்கும் சிறிது காலத்துக்குமுன் பரபரப்பாகப் பேச்சு அடிபட்டுக்கொண்டிருந்த அதன் உரிமையாளர் திரன் அலெசுக்கும் உண்மையில் என்ன நடந்தது? இந்தக் கேள்வி வெறும் சாதாரணக் கேள்வியல்ல. மவ்பிம மற்றும் த சண்டே ஸ்டாண்டர்ட் செய்தித்தாள் மூடப்படுவதற்கும், ஸ்டாண்டர்ட் நியூஸ் பேப்பர்ஸ் (பிரைவேட்) லிமிடெட் நிறுவனத்தின் உரிமையாளர் திரன் அலெஸ் கைதாகி, பின்னர் விடுதலை செய்யப்பட்டதற்கும் பின்னாலுள்ள சூழ்ச்சிச் செயல்கள் இலங்கையின் அரசியல் வரலாற்றிலேயே விறுவிறுப்பான பக்கங்கள்.

# மகிந்த ஒருதடவை அழைப்புக் கொடுத்தால்..

இது தொடர்பான ரகசியங்கள் மறைந்து கிடந்தாலும், ஸ்டாண்டர்ட் செய்திதாள்களுக்கு என்ன நடந்தது என்ற கேள்வி இன்னமும் பல்வேறு தரப்பிலும் எழுந்து வருகிறது. திரன் அலெஸை தங்களது செல்லப்பிள்ளையாக முன்பு கருதிய மகிந்த ராஜபக்ஷவின் அரசு, அவர் மீது 'நம்பிக்கைத் துரோகி' என்று முத்திரை குத்தக் காரணமாக அமைந்தது எது? முன்பு மகிந்தவின் கட்டளையின்படி இந்த ஞாயிற்றுக்கிழமை செய்தித்தாள்கள் தொடங்கப்பட்ட நிலையில், மவ்பிம (சிங்கள) மற்றும் த சண்டே ஸ்டாண்டர்ட் (ஆங்கில) செய்தித்தாள்களை மூடத் தூண்டும் அளவுக்கு ஜனாதிபதிக்கு கசப்புடன், பழிவாங்கும் உணர்வு ஏற்பட்டது ஏன்? சண்டே செய்தித்தாள்கள் மற்றும் திரான் அலெசுக்கு உண்மையில் என்னதான் நடந்தது?

பிரபல கல்வியாளரும், டி.எஸ்.சேனநாயக்க கல்லூரி நிறுவனர் முதல்வரான ஆர்.ஐ.டி. அலெஸின் மகன் திரன் அலெஸ். தொழிலதிபரான அவர் தனது தனித்தன்மையால் அரசியலில் நுழைந்தார். கம்யூனிகேஷன் அண்ட் பிசினஸ் எக்யூப்மென்ட் (பிரைவேட்) லிமிடெட் என்ற நிறுவனத்தை 1988ம் ஆண்டு 10 ஊழியர்களுடன் தொடங்கினார். இது பின்னர் பல நிறுவனங்களைக் கொண்ட குழுமமாக வளர்ந்தது. தற்போது பல்வேறு பன்னாட்டு நிறுவனங்களுக்குத் தகவல் தொடர்புச் சாதனங்களை வழங்கும் லாபகரமான கூட்டு முயற்சிகளில் ஈடுபட்டுள்ளது.

2002ம் ஆண்டு ரணில் விக்ரமசிங்கவுக்கும், விடுதலைப்புலிகளுக்கும் இடையே போர் நிறுத்தம் ஒப்பந்தம் ஏற்பட்டதால், வடக்கு மற்றும் கிழக்குப் பகுதிகளும் வர்த்தகத்துக்குத் திறந்து விடப்பட்டன. தொழிலை விரிவாக்க வேண்டும் என்ற தொழிலதிபரின் எண்ணத்துடன் டயலொக் டெலிகொம் (மொபைல் போன் இணைப்பு வழங்கும் நிறுவனம்) என்ற நிறுவனத்துடன் இணைந்து வடக்கு மற்றும் கிழக்கு மாகாணங்களில் மொபைல் போன் சேவைகளை அலெஸ் வழங்கத் தொடங்கினார்.



2004ம் ஆண்டு அரசு மாறியது. அத்துடன் அலெஸின் அதிர்ஷ்டமும் மாறியது.

முன்பொரு காலத்தில் மங்கள சமரவீரவின் கூட்டாளியாக அலெஸ் திகழ்ந்தார். ஐக்கிய மக்கள் சுதந்திரக் கூட்டமைப்பு தேர்தலில் வெற்றி பெற்று அதிகாரத்துக்கு வந்ததும் மங்கள சமரவீர துறைமுகங்கள் மற்றும் விமானப் போக்குவரத்துத் துறை அமைச்சராக நியமிக்கப்பட்டார். விமான நிலையங்கள் மற்றும் விமான நிறுவனங்களின் வாரியத்தில் சேருமாறு அவர் அலெசுக்கு அழைப்பு விடுத்தார். இதைத் தொடர்ந்து 2004ம் ஆண்டு மே மாதம் விமான நிலையங்கள் மற்றும் விமான நிறுவனங்களின் வாரியத் துணைத் தலைவராக அலெஸ் நியமிக்கப்பட்டார்.

அலெஸ் தலைவராகப் பதவி வகித்த காலத்தில் பண்டாரநாயக்க சர்வதேச விமான நிலையத்தில் மிகப்பெரிய அளவில் புதுப்பிக்கும் வேலைகள் மேற்கொள்ளப்பட்டன. புதிய ஏரோ பாலங்கள், டேர்மினல்கள் ஆகியவை கட்டப்பட்டன. விமான நிலையத்தில் மேற்கொள்ளப்பட்ட இந்தப் புதுப்பிக்கும் வேலைகள் பரவலாக வரவேற்பைப் பெற்றன. பண்டாரநாயக்க சர்வதேச விமான நிலையம் தற்போது சர்வதேசத் தரத்துக்கு மாறியுள்ளது என்பதுதான் இந்தப் பாராட்டுகளின் பொருள். இதன் மூலம் அதிகளவில் சுற்றுலாப் பயணிகளையும், உயர்மட்ட விருந்தினர்களையும் விமான நிறுவனம் இலங்கைக்கு அழைத்து வரும் என்ற நம்பிக்கை தோன்றியது.

2005ம் ஆண்டு ஜனாதிபதி பதவிக்கான தேர்தல் அறிவிக்கப்பட்டபோது, அப்போது ஐக்கிய மக்கள் சுதந்திரக் கூட்டமைப்பு அரசில் பிரதமராக இருந்த மஹிந்த ராஜபக்ஷ, ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி சார்பில் வேட்பாளராக அறிவிக்கப்பட்டார். நவம்பர் தேர்தலுக்கு 2 மாதங்களுக்கு முன்னர், வடக்கு மற்றும் கிழக்கு மாகாணங்களில் திரன் அலெசுக்கு வர்த்தகத் தொடர்புகள் உள்ளதை அறிந்துகொண்ட ராஜபக்ஷ, அவரை அணுகி, விடுதலைப்புலிகளுடன் தொடர்பு ஏற்படுத்தித் தருமாறு கேட்டுக் கொண்டார்.

அலெஸால் அந்த வேண்டுகோளை மறுக்க இயலவில்லை. அவரது வேண்டுகோளை ஏற்றுக் கொண்ட அலெஸ், பசில் ராஜபக்ஷவுடன், அந்த நேரத்தில் கொழும்பு நகரில் தங்கியிருந்த எமில் காந்தனைச் சந்திக்க ஏற்பாடு செய்து கொடுத்தார். எமில் காந்தன் விடுதலைப்புலிகளின் நம்பிக்கைக்குரிய பிரதிநிதி என்று பசிலுக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

அமைச்சர் ஜெயலத் ஜெயவர்த்தனவின் மறுகட்டமைப்பு மற்றும் மறுவாழ்வு அமைச்சகத்தில் மக்கள்தொடர்பு அதிகாரியாக எமில் காந்தன் வேலை பார்த்து வந்தபோது, அவருடன் திரானுக்குப் பழக்கம் ஏற்பட்டிருந்தது. உண்மையில், தனது வர்த்தகத்தை வடக்கு மற்றும் கிழக்கு மாகாணங்களுக்கு விரிவாக்கம் செய்து கொண்டிருந்த திரனுக்கு, எமில் காந்தனை டாக்டர் ஜெயவர்த்தனதான் அறிமுகம் செய்து வைத்தார். இதன் பின்னர் இருவருக்கும் இடையே நட்பு மேம்பட்டது. அந்த நேரத்தில் விடுதலைப் புலிகளுடன் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்று மஹிந்த ராஜபக்ஷ கருதியபோது, எமில் காந்தனை அலெஸ் அறிமுகப்படுத்தி வைத்தார்.

2005ம் ஆண்டு நவம்பர் 18ம் திகதி பல்வேறு செய்தித்தாளில் வெளியான செய்திகளின்படி, அலரி மாளிகைக்குள் நுழைந்த திரன் அலெஸை, புதிய ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மஹிந்த ராஜபக்ஷ, எழுந்து வந்து வரவேற்று, அவரைக் கட்டி அணைத்துக் கொண்டு, 'நீங்கள்தான் நான் ஜனாதிபதியாவதைச் சாத்தியமாக்கிவிட்டீர்கள்'' என்று கூறியதும் வெளியில் தெரிய வந்தது. இதன் பின்னர் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட மறுகட்டமைப்பு மற்றும் வளர்ச்சி அமைப்புக்கு தலைவராக திரன் அலெஸின் பெயரை ஜனாதிபதி அறிவித்தார். (விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டுக்குள் உள்ள பகுதிகள் உட்பட அனைத்துப் பகுதிகளிலும் சுனாமி உதவிகளைக் கையாள ராஜபக்ஷ அறிவித்த ஜெய லங்கா திட்டத்தைச் செயற்படுத்த இந்த அமைப்பு தோற்றுவிக்கப்பட்டது)


திரன் அலெஸ்



ஜனாதிபதித் தேர்தலுக்குச் சில வாரங்களுக்கு முன்னர் மங்கள சமரவீர, கொழும்பில் உள்ள ஆங்கிலம் பேசும் மக்கள் மத்தியில் மஹிந்த ராஜபக்ஷவை ஜனாதிபதி பதவிக்குத் தகுதியானவர் என்ற நம்பிக்கையை ஏற்படுத்துவதற்காக, ஆங்கிலச் செய்தித்தாள் ஒன்றைத் தொடங்குமாறு தானும், மஹிந்த ராஜபக்ஷவும் திரன் அலெஸிடம் கூறியுள்ளதாகக் குறிப்பிட்டார். "எங்களது பொதுக்கூட்டப் பேச்சுக்களை எந்த ஆங்கிலச் செய்தித்தாளும் முக்கியத்துவம் கொடுத்து வெளியிடவில்லை என்பதை நாங்கள் உணர்ந்தோம். எங்களது பிரச்சாரம் வெற்றியடையச் செய்தித்தாள் ஒன்று தேவை என்பதை நானும் மகிந்தவும் அறிந்து கொண்டோம்'' என்று சமரவீர கூறினார். இதை ஏற்றுக் கொண்ட அலெஸ், த வீக்கெண்ட் ஸ்டாண்டர்ட் என்ற செய்தித்தாளை 2005ம் ஆண்டு ஓகஸ்ட் மாதம் தொடங்கினார்.

சந்தேகத்துக்கு இடமின்றி ராஜபக்ஷவின் ஜனாதிபதி பதவிக்காலத்தின் தொடக்கத்தில் அலெஸ் அவரது தனி அன்புக்குப் பாத்திரமானவராகவே இருந்தார். ராஜபக்ஷவின் தேர்தல் வெற்றிக்கு சமரவீரவே காரணம் என்பதால், ராஜபக்ஷ அலெஸ் மீது பிரியமாக உள்ளார் என்று பெரும்பாலானோர் கருதினர். கட்சியின் ஆதரவின்றி மஹிந்த ராஜபக்ஷ பிரச்சாரத்தில் ஈடுபட்ட நேரத்தில், மகிந்தவின் பின்னால் பக்கபலமாக இருந்த சமரவீர, அலெசையும் பிரச்சாரத்தில் இழுத்துவிட்டார். தனது விசுவாசத்துக்குக் கிடைத்த பரிசாகவே ராஜபக்ஷவின் புதிய அரசில் தனக்கு வெளியுறவுத்துறை ஒதுக்கப்பட்டது என்று சமரவீரவே பின்னர் ஒப்புக்கொண்டார். ஏற்கனவே அவரிடம் இருந்த துறைமுகம் மற்றும் விமானப் போக்குவரத்துத் துறையுடன் கூடுதலாக வெளியுறவுத் துறையும் ஒப்படைக்கப்பட்டது.

ராஜபக்ஷவின் வெற்றிக்குப் பின்னர் செய்தித்தாள் நடாத்துவதுவதில் தீவிரம் காட்டத் தொடங்கிய அலெஸ், அதைத் தொடர்ந்து மேலும் 2 தேசியச் செய்தித்தாள்களைத் தொடங்கி அதிலேயே

தொடர்ந்து ஈடுபட முடிவு செய்தார். தேர்தல் முடிந்து 8 மாதங்களுக்குப் பின்னர், 2006 ஆண்டு ஜூலை மாதம் த சண்டே ஸ்டாண்டட், மவ்பிம ஆகிய செய்தித்தாள்களை அவர் தொடங்கினார். ராஜபக்ஷ நிர்வாகத்துடன் 'தேனிலவு'க்காலம் தொடர்ந்ததால், விமான நிலையம் மற்றும் விமான நிறுவனங்களின் தலைவராகவும், ஆர்.ஏ.டி.ஏ.வின் தலைவராகவும் இருந்ததோடு, தனது வர்த்தக நடவடிக்கைகளையும் அவரால் கவனிக்க முடிந்தது.

'செய்தித்தாள் தொழிலைப் புதிய சவாலாக எண்ணிய திரன் அலெஸ், தனது செய்தித்தாள்கள் அரசியல் சார்பின்றி சுதந்திரமாக இருக்க வேண்டும் என்று கருதினார். இதன்படி, செய்தித்தாளைச் சுதந்திரமாக நடாத்தும்படியும், யாருக்கும் சாதக மின்றி செய்திகளை வெளியிடும்படியும் செய்தித் தாளின் ஆசிரியர் குழுவினரிடம் தெரிவித்தார். இதன் விளைவாக, ஊழல், தவறான நிர்வாகம், அரசின் தவறான செயற்பாடுகள் ஆகியவை இந்தச் செய்தித்தாள்களில் தொடர்ந்து வெளிப்படுத்தப் பட்டு வந்ததுடன், மனித உரிமை மீறல்களுக்கும் முக்கியத்துவம் கொடுத்து செய்திகள் வெளியி டப்பட்டன.

ஜனாதிபதி ராஜபக்ஷ இதனால் வருத்தமடைந்தார். ஒவ்வொரு வாரமும் செய்தித்தாள் வெளியானதும், அலெஸை தொடர்புகொண்ட ஜனாதிபதி, "உங் களது செய்தித்தாள் என்னை விமர்சனம் செய் துள்ளது'' என்று புகார் கூறினார்.

ஸ்டாண்டர்ட் நியூஸ் பேப்பர்ஸ் நிர்வாகத்துக்கும், ஊடகவியலாளர்களுக்கும் எதிராக தொல்லை கொடுக்கும் நடவடிக்கைகளை அரசு தொடங்கியதை உணரும்வரை, ஜனாதிபதியின் புகார்களைப் பொருட்படுத்தாமல், அரசுக்கு எதிரான தங்களது விமர்சனத்தை இந்தச் செய்தித்தாள்கள் தொடர்ந்து வெளியிட்டு வந்தன. விடுதலைப்புலிகளுக்கு ஆதரவாக மவ்பிம செயற்படுவதான குற்றச்சாட்டில் இருந்து பிரச்சினை தொடங்கியது. வடக்கு மற்றும் கிழக்கில் மனித உரிமை மீறல்களை வெளிப்படுத்தும் விதத்தில் வெளியான கட்டுரைகளை அடிப்ப டையாகக் கொண்டு இந்தக் குற்றச்சாட்டு கூறப்பட்டது.

2006ம் ஆண்டு நவம்பர் 26ம் திகதி மவ்பிம ஊடகவியலாளர் முனுசாமி பரமேஸ்வரி கைது செய்யப்பட்டதில் இருந்து தொல்லைகள் தீவிர மடைந்தன. அந்த நேரத்தில் பணத்துக்காக தமிழ்த் தொழிலதிபர்கள் பலர் கடத்தப்பட்டனர். இது குறித்த செய்தியை வெள்ளை வான் மூலமான கடத்தல்கள் என வெளிப்படுத்தியதுதான் பரமேஸ் வரி செய்த குற்றம். அவரும் வெள்ளை வான் மூலம்தான் பிடித்துச் செல்லப்பட்டார். பின்னர், விடுதலைப்புலிகளுடன் அவருக்குத் தொடர்புள் ளதாக குற்றம் சாட்டி தீவிரவாதப் புலனாய்வுப் பிரிவினர் (டி.ஐ.டி) கைது செய்தனர். கைது செய்யப்பட்ட பரமேஸ்வரியை மிரிகமவுக்கு (கொழும்பு நகரில் இருந்து 2 மணி நேரப் பயண தூரத்தில் உள்ளது) பொலிசார் அழைத்துச் சென்று, அவர் கொடுத்த தகவலின் பேரில் கிளேமோர் குண்டுகள் மற்றும் ஜெலட்டின் குச்சிகளைக் கைப்பற்றியதாக போதுமான ஆதாரங்கள் ஏதுமின்றி பல செய்தித்தாள்களிலும் செய்திகள் வெளியிடப் பட்டன.

பரமேஸ்வரி கைது செய்யப்பட்டு சில நாட்களுக்குப் பின்னர் 2006ம் ஆண்டு டிசம்பர் 2ம் திகதி, திரன் அலெஸ் மற்றும் மவ்பிம ஆசிரியர் குழுவிடம் தனிப்பட்ட முறையில் ஜனாதிபதி ராஜபக்ஷ பேசினார். பரமேஸ்வரி கைதானது குறித்து பிரச்சாரம் செய்ய வேண்டாம் என்று கேட்டுக் கொண்ட ஜனாதிபதி ராஜபக்ஷ, செய்தித்தாளில் வெளியிடப்படும் அரசியல் கட்டுரையான 'மீ எகென்ஸ்ட் மீ'யில் தனக்கு எதிரான வெளியி டப்படும் விமர்சனங்கள் குறித்த தனது கடும் அதிருப்தியையும் தெரிவித்துக் கொண்டார்.

பரமேஸ்வரி பிடித்துச் செல்லப்பட்டது மற்றும் கைது செய்யப்பட்டது ஆகியவை இலங்கையிலும், வெளிநாடுகளிலும் ஊடகச் சுதந்திரம் மற்றும் மனித உரிமை ஆர்வலர்களிடம் கவலையை ஏற்படுத்தின. பரமேஸ்வரி பிடித்து வைக்கப்பட்டது மனித உரிமைகள் மற்றும் ஊடகச் சுதந்திரத்தை மீறிய செயல் என்று கண்டித்த அவர்கள், பரமேஸ்வரியை உடனடியாக விடுதலை செய்ய வேண்டும் எனக் கோரிக்கை விடுத்தனர். பரமேஸ்வரியை 112 நாட்கள் பிடித்து வைத்திருந்த டி.ஐ.டி., பொலிசார், இறுதியில் அவர் மீது எந்தக் குற்றச்சாட்டையும் சுமத்தாமல் விடுவித்தனர்.

அலெசுக்கு 2007ம் ஆண்டு புத்தாண்டு எந்த வித புத்தொளியையும் கொண்டு வரவில்லை. 2007ம் ஆண்டு ஜனவரி 18ம் திகதி ஸ்டாண்டர்ட் செய்தித்தாள்கள் மற்றும் திரன் அலெஸின் தந்தை ஆர்.ஐ.டி. அலெஸ், அவரது தாய் ரோஹினி அலெஸ் மற்றும் அவரது சகோதரர் டாக்டர் ஹர்ஷா அலெஸ் ஆகியோர் நடாத்தி வரும் கேட்வே கல்லூரி ஆகியவற்றில் உள்நாட்டு வருவாய்த் துறை திடீர் சோதனை நடாத்தியது. கேட்வே கல்லூ ரிக்கோ, அலெஸின் குடும்பத்தினருக்கோ ஸ்டாண் டர்ட் செய்தித்தாள்களுடன் எந்தத் தொடர்பும் கிடையாது.

பெப்ரவரி 10ம் திகதி விமான நிலையங்கள் மற்றும்


61ம் பக்கம் வாருங்கள்

ஈழப் போர்களில் இதுவரை நடந்தவை

அத்தியாயம் 46

பாகம் ஒன்று: இரண்டாம் ஈழப் போர்

திட்டங்கள்.. நகர்வுகள்.. தாக்குதல்கள்

முழுமையான விபரமான யுத்தமுனைப் பதிவுகள்



தமிழ் இயக்கங்களான ரெலோ, ஈ.பி.ஆர்.எல்.எவ், ஈ.என்.டி.எல்.எவ், மற்றும் புளொட் என்பன புலிகளால் தடைசெய்யப்பட்டதாக அறிவிக்கப்பட்டிருந்தவை. தமிழகத்திலும் ஏனைய பிற இடங்களிலும் இந்த அமைப்புகளின் தலைவர்கள் அடைக்கலம் தேடியிருந்தனர்.

அவர்களை ஒவ்வொருவராகத் தேடிப்பிடித்து கொழும்புக்கும், யாழ்ப்பாணம், மட்டக்களப்பு, திருகோணமலை போன்ற பகுதிகளுக்கும் கொண்டு வந்து இறக்கிவிட்டது இந்தியா.

வடகிழக்கு மாகாணசபைக்கான தேர்தலுக்கு வேட்புமனுத் தாக்கல் செய்யும் நாளை அறிவித்தார் அப்போதைய தேர்தல் ஆணையாளர் சந்திரானந்த டி சில்வா. பிற்காலத்தில் இவர் பாதுகாப்பு அமைச்சின் செயலாளராகவும் பதவி வகித்திருந்தார்.

வேட்புமனுக்கள் *1988* ஒக்ரோபர் *3*ம் திகதி தொடக்கம் 10ம் திகதி வரை ஏற்றுக் கொள்ளப்படும் என்று அறிவிக்கப்பட்டது. இந்தத் தேர்தலில் ஜனநாயக ரீதியான அரசாங்கத்தை வடகிழக்கில் உருவாக்குவதற்கு இந்தியா பாடுபடுவது போன்று காட்ட முயற்சிகள் எடுக்கப்பட்டாலும் உண்மை அவ்வாறானதாக இருக்கவில்லை.

தமக்குச் சார்பான தமிழ் இயக்கங்களை ஆட்சியில் அமர்த்துவதே இந்தயாவின் நோக்கம். அது தவறிப் போனால இந்தியாவின் திட்டங்கள் எல்லாமே பிழைத்துப் போய்விடுமே. இதனால் புலிகள் சார்புடைய அல்லது வேறு கட்சிகள், சுயேட்சைக் குழுக்கள் தேர்தலில் போட்டியிட முடியாத நிலை உருவாக்கப்பட்டது.

குறிப்பாக யாழ்ப்பாணம் கச்சேரியில் வேட்புமனுத் தாக்கல் தொடங்கிய நாளில் இருந்து அந்த வீதி வழியான போக்குவரத்து தடுக்கப்பட்டது. ரண்டாயிரம் ரூபாவுக்கு மேல் பொக்கற்றினுள் கொண்டு சென்றவர்கள் கூடத் திருப்பி அனுப்பப்பட்டனர். அவர்கள் தேர்தலில் போட்டியிடுவதற்கான கட்டுப்பணத்தைச் செலுத்தி விடுவார்கள் என்ற பயம் தான் இதற்குக் காரணம்.

தேர்தலில் தமக்குச் சார்பான இயக்கங்களுக்குப் போட்டியாக யாரும் வந்து விடக்கூடாது என்பதற்காகவே இந்தியப்படைகள் அப்படியொரு பாதுகாப்புக் கெடுபிடியை மேற்கொண்டன.

வடகிழக்கு மாகாணசபையின் *71* ஆசனங்களுக்காக நடைபெற்ற தேர்தலில் ஈ.பி.ஆர்.எல்.எவ் *35* ஆசனங்களையும், ஈ.என்.டி.எல்.எவ் *12*ஆசனங்களையும், சிறிலங்கா முஸ்லிம் காங்கிரஸ் *17*ஆசனங்களையும், ஐதேக *1* ஆசனத்தையும் கைப்பற்றின.

*35* ஆசனங்களைக் கொண்ட கிழக்கு மாகாணஸீசத்தில் சிறிலங்கா முஸ்லிம் காங்கிரஸ் *17* ஆசனங்களோடு முதலிடத்தைப் பெற்றது. அஷ்ரப்பினால் தொடங்கப்பட்ட இந்தக் கட்சி சந்தித்த முதலாவது தேர்தலும் இதுதான்.

அடுத்து *12* ஆசனங்களோடு ஈ.பி.ஆர்.எல்.எவ் இரண்டாவது இடத்தையும், *5* ஆசனங்களைப் பெற்ற ஈ.என்.டி.எல்.எவ் முன்றாவது இடத்தையும் பெற்றன. ஐதேகவுக்கு ஒரு ஆசனம் கிடைத்தது. அப்போது கிழக்கு மாகாணத்தில் மொத்தம் *534,306* வாக்காளர்கள் இருந்தனர். ஆனால் *399,066* வாக்குகள் தான் அளிக்கப்பட்டன.

இங்கே *399,066* வாக்காளர்கள் தான் வாக்களித்தனர் என்று கூறாததற்குக் காரணம் இருக்கிறது. இந்தத் தேர்தலில் அளிக்கப்பட்ட வாக்குகள் அனைத்தும் அந்தந்த வாக்காளரால் அளிக்கப்பட்டதல்ல.

இந்தியப்படைகளின் துணையோடு குறிப்பிட்ட இயக்கங்கள் தமக்குத் தாமே போட்டுக் கொண்ட வாக்குகள் தான் அதிகம். அதேவேளை வடக்கு மாகாணத்தில் போட்டியின்றி ஈ.பி.ஆர்.எல்.எவ் மற்றும் ஈ.என்.டி.எல்.எவ் என்பன தெரிவு செய்யப்பட்டன.

போட்டிக்கு எவரும் குறுக்கே வந்து விடாதபடி இந்தியப்படைகள் காவலுக்கு இந்ததால் இது சாத்தியமானது.



இப்போது இலங்கை அரசுக்கு இராஜதந்திர அறிவுரைகளைக் கூறி வரும் ஒருவர். அப்போது இடதுசாரியான இவரும் ஈ.பி.ஆர்.எல்.எவ்வில் இருந்தவர்.

வரதராஜப்பெருமாள் முதலமைச்சராக நியமிக்கப் படுவதை தான் தீவிரமாக எதிர்த்ததாக இவர் பின்னர் கூறியிருந்தார். இன்னொரு அமைச்சர் முஸ்லிம் சமூகத்தைச் சேர்ந்தவர். முதலமைச்சருடன் மூன்று பேர் தமிழர்கள்;. 1990ம் ஆண்டு வரதராஜப்பெருமாள் ஈழப்பிரகடனத்தைச் செய்து விட்டு இந்தியாவுக்குத் தப்பி ஓடும் வரைக்கும் இந்த மாகாணசபை இந்தியாவின் ஆசீர்வாதத்தோடு இயங்கிக் கொண்டிருந்தது.

வடகிழக்கு மாகாணசபை திருகோணமலையை தலைநகராகக் கொண்டு செயற்பட்டது. இந்த மாகாணசபையைக் கைப்பற்றி ஆட்சியை அமைத் ததும் ஈ.பி.ஆர்.எல்.எவ்வும், ஈ.என்.டி.எல்.எவ்வும் தாங்கள் நினைத்ததே சட்டமென்று ஆட்டம் போடத் தொடங்கின. சிவில் தொண்டர் படை என்ற பெயரில் மாகாண பொலிஸ் அமைப்பு உருவாக்கப்பட்டது.

மாகாணசபைகளுக்கு பொலிஸ் அதிகாரம் வழங்கப்பட்டிருப்பினும் இலங்கை அரசு அதை இற்றை வரைக்கும் வழங்காமல் தடுத்து

இந்தத் தேர்தலை அடுத்து அறுதிப் பெரும் பான்மைக்கு ஒரு ஆசனமே குறைவாகப் பெற்றிருந்த ஈ.பி.ஆர்.எல்.எவ்வின் வரதராஜப்பெருமாள் முத லமைச்சராகத தெரிவு செய்யப்பட்டார்.

அப்போது ஈ.பி.ஆர்.எல்.எவ் இயக்கத்துக்கு பத் மநாபா தான் பொதுச்செயலாளராக இருந்தார். ஈ.பி.ஆர்.எல்.எவ்வில் பொதுச்செயலாளர் பதவி தான் உயர்ந்த அதிகாரம் கொண்டது. ஆனால் பத்மநாபா அதிகாரத்துக்கு வரும் திட்டத்தைக் கொண்டிருக்கவில்லை.

அதேவேளை வரதராஜப்பெருமாள் இந்தியாவுக்கு சிறந்ததொரு தெரிவாக அமைந்தார். இவர் இந்தியா எதைச் சொன்னாலும் தலையாட்டும் ரகம். 1988 டிசம்பர் 10ம் திகதி வட கிழக்கு மாகாணத்தின் முதலாவது முதலமைச்சராக வரதராஜப்பெருமாள் பதவியேற்றார். அவரே வடகிழக்கு மாகாணத்தின் கடைசியான முதலமைச்சராகவும் அமைந்து விட்டார்.

அவருக்குப் பின்னர் இணைந்த வடகிழக்கு மாகாணத்தில் முதலமைச்சராக எவரும் பதவி வகிக்கவும் இல்லை தேர்தல் நடக்கவும் இல்லை. வரதராஜப்பெருமாளுடன் 5பேர் கொண்ட அமைச்சரவையும் பதவியேற்றது. ஒருவர் சிங்களவர் அவர் தான் தயான் ஜெயதிலக.





வைத்திருக்கிறது. அப்போதும் இலங்கை அரசு வட கிழக்கு மாகாணத்துக்கென தனியான பொலிஸ் படையை உருவாக்க முனைந்த போது இலங்கை அரசு கடுமையாக எதிர்த்தது. ஆனால் இந்தியாவின் ஆசீர்வாதம், பாதுகாப்பு ஆகியவற்றின் மத்தியில் சிவில் தொண்டர் படையை மாகாணசபை உருவாக்கியது.

இதில் குறிப்பிட்டளவான ஈ.பி.ஆர்.எல்.எவ் உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டனர். அதேபோன்று ஈ.பி.ஆர்.எல்.எவ் மற்றும் ஈ.என்.டி.எல்.எவ் ஆகியவற்றைக் கொண்டு தமிழ்த் தேசிய இராணுவம் என்ற படையையும் உருவாக்கியது இந்தியா.

தமிழ்த் தேசிய இராணுவத்துக்கு ஆட்கள் சேரவில்லை என்பதால் வடக்கு கிழக்கில் தமிழ் இளைஞர்கள் பலாத்காரமாகப் பிடித்துச் செல்லப் பட்டனர். ஈழ விடுதலைப் போராட்டம் ஆரம்பமாகிய பின்னர் கட்டாய ஆட்சேர்ப்பு நடத்தப்பட்டது இதுவே முதல் தடவையாகும்.

கட்டாய ஆட்சேர்ப்பை புலிகள் மேற்கொள்வதாக குற்றம் சாட்டும் இந்தியா *1988, 89*இல் தானே அதைத் தொடக்கி வைத்த பிதாமகன் என்ற உண்மையை எப்படி மறந்து போயிற்றோ தெரியவில்லை.

வீதிகளில் இளைஞர்கள் நடமாட முடியாது வாகனங்களில் பயணம் செய்ய முடியாது யாழ்தேவி ரயில் ஆனையிறவு, மாங்குளம், கிளிநொச்சி மறிக்கப்பட்டு இளைஞர்கள் பிடித்துச் செல்லப் பட்டனர்.

உயர் கல்வி பயின்ற மாணவர்கள் பிடித்துச் செல்லப்பட்டனர். கட்டாயமாக இழுத்துச் செல்லப்பட்ட இளைஞர்கள் தப்பிச் செல்ல முற்படும் போதும் பயிற்சிகளை மேற்கொள்ள மறுத்த போதும் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

சித்திரவதைகள் செய்யப்பட்டனர். கிழக்கிலும் வடக்கிலும் இத்தகைய பயிற்சி முகாம்களை அமைத்து தமிழ்த் தேசிய இராணுவத்தை உருவாக்க இந்தியா முற்பட்டதற்குக் காரணம் இருந்தது.

தமிழ்த் தேசிய இராணுவத்ததை புலிகளுக்கு எதிரான போரில் இறக்கி விட்டு விட்டு தான் பாதுகாப்பாக ஒதுங்கி நின்று வேடிக்கை பார்ப்பதே இந்தியாவின் திட்டம்.



கட்டாயமாக இளைஞர்கள் தமிழ்த் தேசிய இராணுவத்துக்குச் சேர்க்கப்பட்ட போது யாழ்ப் பாணத்தில் இருந்து வெளியேற முடியாத நிலை இளைஞர்களுக்கு ஏற்பட்டது. ஆனையிறவிலும், கிளிநொச்சி, மாங்குளம் பகுதிகளிலும் பிள்ளை பிடிகாரர்கள் நின்றதால் இளைஞர்கள் வெளியேறிச் செல்ல வேறுவழி இருக்கவேயில்லை.

இதனால் கடல்வழியாக முல்லைத்தீவுக் காடுகளில் இருந்த புலிகளின் முகாம்களுக்கு பெருமளவான இளைஞர்கள் போயினர். இது புலிகளுக்குப் பலத்தைக் கொடுத்தது. அப்போது யாழ்ப்பாண இளைஞர்கள் பலரைக் காப்பாற்றியது இலங்கை விமானப்படைதான் என்பது பலருக்கும் ஆச்சரியமாக விடயமாக இருக்கலாம்.

ஆனால் அதுதான் உண்மை.

விமானப்படையின் அவ்ரோ விமானங்கள் அப் போது பலாலியில் இருந்து இரத்மலானைக்கு இளைஞர்களை அழைத்துச் சென்று நல்ல வருமானம் சம்பாதித்தன. இது ஒன்றும் தமிழ் மக்கள் மீது கொண்ட பரிவினாலோ பாசத்தி னாலோ அல்ல. ஒன்று நல்ல வருமானம் கிடைத்தது.

அடுத்தது தமிழ்த் தேசிய இராணுவமோ, சிவில் தொண்டர்படையோ பலம் பெறுவதை அரசாங்கம் விரும்பவில்லை. அது தமது அரசுக்கு நெருக் கடியைக் கொடுக்கும் என்றும் தனிநாட்டுப் பிரிவினைக்கு வழிகோலும் என்றும் இலங்கை அரசு கருதியது.

கட்டாய ஆட்சேர்ப்புக்குப் பயந்து இளைஞர்கள் புலிகளுடன் சேர்வதும் ஆபத்தானதென்று இலங்கை அரசுக்குத் தெரியும்.

எனவே இந்த இளைஞர்களை கொழும்புக்குக் கொண்டு வந்து சேர்த்தால் அவர்களை வெளிநாட்டுக்குத் தப்பிச் சென்று விடுவார்கள் என்பது இலங்கை அரசுக்கு நன்கு தெரியும். இதனால்தான் இப்படியானதொரு வழியைத் திறந்து விட்டது. நல்ல பிள்ளையாக நடித்தது.

விமானப் பயணம் என்றால் அது ஒன்றும் வசதியானதல்ல. நின்றபடிதான் பயணம். நெருக்கியபடி, பெருமளவு இளைஞர்கள் தப்பி னோம், பிழைத்தோம் என்று கொழும்புக்குப் பறந்தனர். அப்போது சில கார் உரிமையாளர்கள் பலாலிக்கு இளைஞர்களை அழைத்துச் செல்லும் பணியில் ஈடுபட்டனர்.

அச்சுவேலி, இடைக்காடு வழியாக பலாலி விமானத்தளத்தின் கிழக்குப் பகுதியால்தான் அவர்களை அந்த வாகனங்கள் அழைத்துச் செல்லும். அந்த வாகன உரிமையாளர்களைத் தேடி ஈ.பி.ஆர்.எல்.எவ், ஈ.என்.டி.எல்.எவ் இயக்கத்தினர் தேடியலைந்த சம்பவங்களும் நிறையவே இடம் பெற்றன.

வடகிழக்கு மாகாணசபை நிறுவப்பட்ட பின்னர், யாழ்ப்பாணத்தில் இருந்து வரும் ஊடகங்கள் இந்தியாவுக்கும் அதன் நிழலில் இயங்கிய இயக் கங்களுக்கும் கண்ணில் உறுத்தலை ஏற்படுத்தியது.

புலிகளுடனான சண்டையைத் தொடங்குவதற்கு முன்னரே இந்தியப்படை முரசொலி, ஈழமுரசு ஆகிய பத்திரிகை நிறுவனங்கள் குண்டு வைத்து அழித்தது. பின்னர் முரசொலி வெளிவர ஆரம்பித்தது.

அதன் ஆசிரியராக இருந்தவர் இப்போது கனடாவில் இருக்கிறார். அவரது மகன் அகிலன். ஈ.பி.ஆர்.எல்.எவ் இயக்கத்தினர் முரசொலியின் ஆசிரியரைக் கொல்லும் நோக்கில் அவரைத் தேடிச்சென்றனர். ஆனால் அவர் வீட்டில் இல்லாததால் ஏமாற்றமடைந்து அவரது மகனைச் சுட்டுக் கொன்று விட்டுப் போயினர்.

அதேவேளை உதயன் மற்றும் ஈழநாடு ஆகிய பத்திரிகைகளும் யாழ்ப்பாணத்தில் வெளிவந்து கொண்டிருந்தன. ஒரு நாள் முரசொலி மற்றும் ஈழநாடு ஆகியவற்றுக்குள் புகுந்த ஈ.பி.ஆர்.எல்.எவ் இயக்கத்தினர் அந்த அலுவலகங்களை மூடிவிட்டு அங்கிருந்த அச்சியந்திரங்களை கொண்டு சென்றனர். அப்போது வீரகேசரி யாழ்ப்பாணத்தில் ஒரு பதிப்பை வெளியிடும் ஆயத்தத்தோடு அச்சியந் திரத்தை கொண்டு சென்றிருந்தது. அதையும் அவர்கள் விட்டு வைக்காமல் கொண்டு சென்றனர்.

**(தொடரும்)**

ந்தியாவில் அடுத்த வருடம் (2010ம் ஆண்டு) கொமன்வெல்த் விளையாட்டுப் போட்டிகள் நடைபெறவுள்ளன. இதற்கான கால அவகாசம் குறைவாக உள்ளபோதும், இதற்கான ஆயத்தங்களைச் செய்வதில் இந்தியா முனைப்புக்காட்டி வருகிறது. உலகப் பொருளாதார மந்தநிலையிலும் இந்தியா தனது பொருளாதாரத்தைச் சரிவடையாமல் பார்த்துக் கொண்டிருக்கிறது என்பதை நிரூபிக்கும் விதமாக இந்த விளையாட்டுப் போட்டியை நடாத்தத் திட்டமிட்டுள்ளது.

2005ம் ஆண்டு கொமன்வெல்த் விளையாட்டுப் போட்டிகளை இந்தியா திறம்பட நடாத்திக் காட்டியது இந்தியாவுக்கு நல்ல பெயரை வாங்கிக் கொடுத்திருந்தது. பலத்த போட்டிக்கிடையே, கனடாவில் உள்ள ஹமில்டன் நகரில் நடக்கவிருந்த இந்தப் போட்டி அப்போது புதுடில்லிக்கு மாற்றப்பட்டபோது இந்தப் போட்டி மிகுந்த எதிர்பார்ப்பை ஏற்படுத்தியிருந்தது. 1996ல் ஜமைக்காவிலும் 1998ல் மலேசியாவிலும் இப்போட்டி நடாத்தப்பட்டது. 2005ல் புதுடில்லிக்கு வாய்ப்புத் தரப்பட்டது.

3வது வளர்ந்து வரும் நாடாக அப்போது கருதப்பட்ட இந்தியா, இதை வெற்றிகரமாக நடாத்திக் காட்டிய காரணத்தால், இப்போது மீண்டும் ஒரு வாய்ப்பு இந்தியாவுக்குக் கிடைத்துள்ளது. விளையாட்டுப் போட்டிகளை இந்தியா 1.6 பில்லியன் டொலர் செலவில் நடாத்தத் திட்டமிடப்பட்டுள்ளது.

# இந்தியாவுடன் போட்டிக்கு நிற்கிறது ஆமை!

ஜவாஹர்லால் நேரு ஸ்டேடியம்

முக்கியமான போட்டிகள் புதுடில்லி ஜவாஹர்லால் நேரு ஸ்டேடியத்தில் நடைபெறவுள்ளன. இதற்காக விளையாட்டுக் கிராமம் ஒன்று அமைக்கப்பட்டு வருகிறது. 5 ஸ்டேடியங்கள் புதிதாகக் கட்டப்பட்டு வருகின்றன. பளுதூக்கும் போட்டி நடாத்த உள்ளரங்கு மைதானம் ஒன்று கட்டப்படுகிறது. இதுதவிர, இந்திரா காந்தி விளையாட்டு வளாகத்தில் குத்துச் சண்டை உள்ளரங்கு, சிர்ரி கோட்டையில் பூப்பந்து உள்ளரங்கு, ஸ்குவாஷ் போட்டி உள்ளரங்கு, டென்னிஸ்ஸுக்கு யமுனா காம்ப்ளக்ஸிலும் அரங்குகள் கட்டப்படுகின்றன.

40 மில்லியன் டொலர் செலவில் உலகத்தரம் வாய்ந்த விளையாட்டுக் கிராமம் கட்டப்பட்டு வருகிறது. அதில் 25 நாடுகளைச் சேர்ந்த 20 விளையாட்டுகளில் சம்பந்தப்பட்ட விளையாட்டு வீரர்கள், வீராங்கனைகள், விளையாட்டு அலுவலர்கள் தங்கவைக்கப்படவிருக்கின்றனர்.

ஏற்பாடுகள், எதிர்பார்ப்புகள் எல்லாமே அதிகமாக இருந்தபோதிலும் பல துறைகளிடையே ஒருங்கிணைப்பு சரிவர இல்லாததாலும், மும்பை வெடிகுண்டுத் தாக்குதலால் ஏற்பட்டுள்ள அச்சம், உலகப் பொருளாதார மந்தநிலை என பல காரணங்களில் பல போட்டிகளை நடாத்த இந்தியாவால் முடியாத நிலை ஏற்படலாம் எனக் கருதப்படுகிறது. அப்படி இந்தியாவால் முடியாத நிலை ஏற்பட்டால் விளையாட்டுப்போட்டிகளைத் தங்கள் நாட்டுக்குக் கடத்திச்செல்ல பல நாடுகள் தயாராகக் காத்திருக்கின்றன.

இப்போட்டிக்கான தயார்படுத்துதல் வேலைகளின் முன்னேற்றம் பற்றி விசாரிக்க கடந்த ஆண்டு சீதாராம் யெச்சூரி தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. டில்லியில் போதிய பாதுகாப்புடன் வீரர்களைத் தங்கவைக்க முடியுமா என இந்தக் குழு இந்த வாரம் சந்தேகம் தெரிவித்துள்ளது பலரை வியப்பில் ஆழ்த்தியுள்ளது. (இந்தக் குழுவின் ஆய்வறிக்கை 2010 கொமன்வெல்த் விளையாட்டுப் போட்டிக்கான வசதிகள் சுற்றுலா அடிப்படை வசதி மேம்பாடு என்ற பெயரில் வெளியாகியுள்ளது)

பாகிஸ்தானில் இலங்கை கிரிக்கட் அணிமீது நடாத்தப்பட்ட துப்பாக்கித் தாக்குதல்களின் பின்னணியில் இந்தியாவின் உளவு அமைப்பு றோ இருக்கலாம் என்ற சந்தேகத்தை பாகிஸ்தானின் உளவு அமைப்பு ஐ.எஸ்.ஐ.யின் முக்கிய அதிகாரி ஒருவர் கிளப்பியுள்ள நிலையில், இப்போட்டிகள் பாகிஸ்தானின் எதிரி நாடான இந்தியாவில் நடைபெறவுள்ளது கொஞ்சம் ரிஸ்க்கானது என்றும் கூறப்படுகின்றது.



பாதுகாப்பு ஏற்பாடுகளை முழுமையாகச் செய்வதற்காக, இப்போட்டி நடாத்துவதற்கான விளையாட்டு அரங்குகளைக் கட்டி முடித்து இந்த வருடம் டிசம்பர் 31ம் திகதி நிர்வாகக் குழுவிடம் ஒப்படைக்க வேண்டும். ஆனால், பல இடங்களில் வேலைகள் முடிவுறாமலோ அல்லது தொடங்கப்படாமலோ உள்ளன.

போதிய அளவு நிதி வசதி செய்து தரப்பட்டுள்ள போதிலும் புதிய அடிப்படைக் கட்டுமான வசதிகள் என்னென்ன ஏற்படுத்த வேண்டும் என ஷீலா தீட்சித் தலைமையிலான டில்லி மாநில அரசு 2008 நவம்பர் வரையிலும் திட்ட அறிக்கையை ஆராய, அமைப்பிடம் தாக்கல் செய்யவில்லை என்பது குறையாகச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. போதிய அளவுக்குத் தங்கும் வசதிகளை ஏற்படுத்தித்தர டில்லி நகர அபிவிருத்தி அமைப்பு (டி.டி.ஏ.) திறன் படைத்ததா? என சந்தேகம் உள்ளதாக இந்த 31 நபர் குழு தனது அறிக்கையில் குறிப்பிட்டுள்ளது.

இந்த விளையாட்டுப் போட்டி தொடங்குவதற்கு முன் டில்லியைச் சுற்றிலும் உள்ள டூரிஸ்ட் முக்கியத்துவம் வாய்ந்த இடங்களைச் சீரமைத்து அழகூட்ட நிர்பந்திக்கவும், ஹோட்டல்களைச் சீரமைத்து தயார் நிலையில் வைக்கும்படி நிர்பந்திக்கவும் இந்த அமைப்புக்குத் திறன் உள்ளதா எனவும் சந்தேகம் கிளப்பப்பட்டுள்ளது. டில்லியிலும் அதைச் சுற்றிலும் உள்ள ஹோட்டல்களில் 14,000 அறைகள்தான் உள்ளன. ஆனால், இந்த விளையாட்டுப் போட்டியைக் காண வெளிநாடுகளிலிருந்து வரப்போகும் பார்வையாளர்களுக்காக 30,000 அறைகள் தேவைப்படுகின்றன.

விளையாட்டுப் போட்டிகள் நடாத்துவதற்குத் தேவையான கட்டுமானத் திட்டங்களை நிறைவேற்ற பல்வேறு அமைப்புகள் அனுமதிதர வேண்டும். ஆனால், இவற்றிடம் ஒருங்கிணைப்பை ஏற்படுத்த டில்லி மாநில அரசு தவறிவிட்டது எனக் குற்றம் சாட்டப்பட்டுள்ளது. பல்வேறு அரசுத் துறைகளை ஒருங்கிணைத்து காரியம் சாதிக்கப் பொறுப்பான அதிகாரிகள் யாரும் இல்லை. வீதிகளைத் தயார் செய்தல், விமான வசதி, மின் விநியோகம், கேளிக் கைகளுக்கு ஏற்பாடு செய்தல், தகவல் தொடர்பு மையங்களை ஏற்படுத்துதல் என எதுவுமே உருப் படியாகச் செய்யவில்லை.

இந்தக் குறைகள் பற்றியெல்லாம் இந்தக் குழு சுட்டிக் காட்டும் முன், Jones Lang LaSalle Hotels ஹோட்டல் நிறுவனம் டில்லியில் உள்ள குறைபாடுகளைச் சுட்டிக்காட்டிவிட்டது. நிதியுதவி செய்யும் நிறு வனங்கள், ஒழுங்குமுறை அமைப்புகள் ஆகிய வற்றின் காரணமாகவே ஹோட்டல் அறைகளின் எண்ணிக்கையை அதிகரிக்க முடியாமல் போனது என்கிறது அந்த நிறுவனம். இதனால், போட்டி நடக்கும்போது தங்குமிடம் விஷயத்தில் பல பிரச் சினைகள் ஏற்படும் என அது தெரிவித்துள்ளது.

டில்லி மேம்பாட்டு அமைப்பு 34 ஹோட்டல்களில் அறைகளின் எண்ணிக்கையை அதிகரிக்க அனுமதி அளித்தது. 2006 ஜனவரி முதல் இந்தக் கூடுதல் அறைகளைக் கட்டியிருக்கலாம். ஆனால், எந்த வேலையும் உருப்படியாக நடைபெறவில்லை. 39 கூடுதல் ஹோட்டல்கள் கட்ட அனுமதி தரப் பட்டதில் 19 ஹோட்டல்கள் மட்டும்தான் கட்டப் பட்டு வருகின்றன. உலகப் பொருளாதார மந்த நிலை காரணமாக ஹோட்டல்களைக் கட்ட நிதி யுதவி கிடைப்பது கடினமானதுதான் இதற்குக் காரணம் என விளையாட்டு அமைச்சக அதிகாரி ஒருவர் கூறினார்.

விளையாட்டுக் கிராமம் கட்டுவதற்கான கட்டுமான வேலையும் சந்தேகத்திற்கிடமாகிவிட்டது. இதைக் கட்ட ஒப்பந்தம் செய்திருக்கும் துபாயைச் சேர்ந்த கட்டுமான நிறுவனமான எஸ்ஸார் எம்.ஜி.எப். கட்டுமானச் செலவுக்கு நிதி தரும்படி டில்லி நகர் மேம்பாட்டு அமைப்பை அணுகியதுதான் இதற்குக் காரணம்.

இந்திய அரசு ஏற்கெனவே, இந்த நிறுவனத்திற்கு இந்தியாவின் மிகப் பெரிய அரசு வங்கியான பாரத ஸ்டேட் வங்கி மூலம் 15.8 மில்லியன் டொலர் கடனுதவிக்கு ஏற்பாடு செய்தது. கடனைத் திருப்பிச் செலுத்த 9 மாதகால அவகாசமும் வாங்கித் தந்தது. ஆனால், இப்போது கூடுதலாகத் தேவைப்படும் கடனுதவியைக் கொடுக்க முடியாததால் சிக்கல் ஏற் பட்டுள்ளது. இப்படி அடிப்படைக் கட்டுமான விவகாரங்களில் சுணக்கம் நிலவுவதுடன், விளையாட்டின் பிரதான நிகழ்ச்சிகளை எங்கு நடாத்துவது என்பதிலும் குழப்பம் நிலவுகிறது. யமுனை நதியின் வெள்ள நீர் வடிநிலப் பகுதியில் இப்போட்டிக்கான பிரதான அரங்குகள் அமைக்கப்பட்டு வருகின்றன. ஆனால், அதற்காக முதலில் அங்குள்ள 1000 மரங்களை வெட்ட வேண்டும். இதற்குச் சுற்றுச்சூழல் துறையிட மிருந்து அனுமதி பெறுவது இயலாது போலத் தெரி கிறது. எனவே, இந்த மரங்களைச் சட்ட விரோதமாகத்தான் வெட்ட வேண்டியிருக்கிறது. மரங்களை வெட்டி இடத்தைச் சுத்தப்படுத்தினால் யமுனை நதியில் வெள்ளம் ஏற்படும்போது பல பிரச் சினை ஏற்படும்.

டில்லியில் குடிநீர் போதிய அளவில் கிடைக்காது என்பதும் ஒரு பிரச்சினையாக உள்ளது. புதிதாகக் குடிநீரைக் கொண்டுவரும் எந்தத் திட்டமும் பரி சீலனையில் இல்லை.

இந்தச் சிக்கல்களையெல்லாம் ஆராய்ந்த உச்ச நீதிமன்றம் விளையாட்டுப் போட்டிகளுக்கான கட்டு மானத் திட்டங்களை மேற்கொள்ளும் முன்பாக அவை அவசியமானதுதானா என்று மறுபரி சீலனை செய்யும்படி உத்தரவிட்டுள்ளது மற்றொரு குழப்பம்.

உலகத்தரம் வாய்ந்த விளையாட்டை நடாத்த டில்லி யின் சுற்றுச்சூழலைக் கெடுக்க வேண்டுமா எனச் சுற்றுச்சூழல் அமைச்சகம் கேட்கிறது. சுற்றுச்சூழல் மாசுபடாமல் பாதுகாக்க உரிய நடவடிக்கை மேற் கொள்ளாவிடில் பயங்கரப் பின் விளைவுகளைச்



சந்திக்க நேரிடும் என்று அதன் அமைச்சர் கூறுகிறார். விளையாட்டை எப்படியும் டில்லியில் நடாத்திவிட வேண்டும் என திட்டமிட்டு வருவோர், தங்களுக்குள்ள அவசரத்தில் டில்லியில் இந்த விளையாட்டு நடந்து முடிந்தபின் ஏற்படும் சுற்றுச் சூழல் கேட்டை எப்படிச் சமாளிப்பது எதுவும் கூற முடியாத நிலையில் உள்ளனர்.

இப்படி விளையாட்டுப் போட்டிக்கு ஏற்பாடு செய்யும்போது பல்வேறு பிரச்சினைகளை டில்லி சந்திப்பது இது முதல் முறையல்ல. கடந்த ஆண்டு இதுபற்றி ஆய்வு செய்து பார்த்த கொமன்வெல்த் விளையாட்டு சம்மேளனம், இந்தியாவில் எந்த வேலையும் விரைவாக மேற்கொள்ளப்படவில்லை எனக் குறை கூறியது. எல்லா வேலைகளையும் சீக்கிரமாகச் செய்து முடிக்காவிடில் இந்த விளையாட்டுப் போட்டியை நடாத்தும் வாய்ப்பைக் கூட இந்தியா இழந்துவிட நேர்ந்திடலாம் என அந்தச் சம்மேளனம் எச்சரித்திருந்தது.

இனிமேல், டில்லியில் துரிதமாக வேலை நடக்கிறதா என இருமுறை இந்தச் சம்மேளனம் ஆய்வு நடாத்தத் திட்டமிட்டுள்ளது. இந்த ஆண்டு ஓகஸ்ட்டில் ஒரு தடவையும் 2010ம் ஆண்டு மார்ச் மாதத்திலும் இந்த ஆய்வுகள் நடாத்தப்படலாம்.

சம்மேளனம் கூறிய கருத்துகளைக் கேட்டதும் எப்படியாவது பாடுபட்டு இந்த விளையாட்டுக்கான அடிப்படை வசதிகளைச் செய்து தருவதாக இந்திய ஒலிம்பிக் சங்கத் தலைவர் சுரேஷ் கல்மாதி உறுதியளித்துள்ளார். "கொமன்வெல்த் விளையாட்டுப் போட்டிகள் இந்தியாவில்தான் திட்டமிட்டபடி நடைபெறும். இது குறித்து யாருக்கும் எந்தச் சந்தேகமும் தேவையில்லை" என அவர் தெரிவித்துள்ளார்.

இந்தப் போட்டிகளுக்காக ஒரு வருடத்துக்குள் டில்லியில் பெரிய கட்டுமானங்களைச் சீரமைக்க வேண்டியுள்ளது. குறிப்பாக டில்லி ரயில் நிலையத்தைச் சீரமைக்க வேண்டியிருக்கிறது. டில்லியின் பிரதான ரயில்நிலையத்தை நவீனமயமாக்கும் திட்டத்தை 2010 ஒக்டோபருக்குள் நிறைவேற்றி முடிப்பதாக இந்திய ரயில்வே அமைச்சர் லாலு பிரசாத் யாதவ் உறுதியளித்துள்ளார்.

ஆனால் அதிலும் சோதனையாக, வேலைகள் என்னவோ மெதுவாகத்தான் நடந்து வருகின்றன. ரயில்நிலையத்தை நவீனப்படுத்தும் திட்டத்திற்கு டில்லி நகர் மேம்பாட்டு அமைப்பின் அனுமதி இன்னும் பெறப்படவில்லை. இதுபோல ஏகப்பட்ட தாமதங்கள் உள்ளன. இப்படி பல இடர்பாடுகள் இருப்பதாக கொமன்வெல்த் விளையாட்டுப் போட்டியை 6 மாதங்கள் கழித்து நடாத்தலாம் என யோசனை தெரிவிக்கப்படுகிறது.

2008 கோடைக்கால ஒலிம்பிக் போட்டியை சீனா நடாத்திக் காட்டியிருக்கிறது. அதற்கு இந்தியா சளைத்ததல்ல என நிரூபிக்க வேண்டுமானால் இந்தப் போட்டியை வெற்றிகரமாக நடாத்திக் காட்டியாக வேண்டும் என்ற கட்டாயம் இந்திய அரசுக்கு ஏற்பட்டுள்ளது. அதுமட்டுமல்லாமல், டில்லியில் உள்ள விளையாட்டு அரங்குகளைப் புதுப்பிக்க வேண்டியுள்ளது. புதிய விளையாட்டு அரங்குகள் மூலம் டில்லியைச் சேர்ந்த ரியல் எஸ்டேட் காரர்கள் புதிய வாய்ப்புகளைப் பெற வழி ஏற்பட்டுள்ளது. ஆனால், இந்தப் போட்டியை நடாத்துவதில் அரசுக்கு என்ன லாபம் என யூகிப்பது கடினம் என்பது வல்லுநர்களின் கருத்து.

30 ஆண்டுகளுக்கு முன் Montreal நடாத்திய ஒலிம்பிக் போட்டிக்காக கனேடிய அரசு வாங்கிய கடனின் கடைசித் தவணையை, கனேடிய அரசு இப்போதுதான் செலுத்தி முடித்திருக்கிறது என்றால் இதில் அந்தந்த அரசுகளுக்கு எப்படி கையைக் கடிக்கிறது என்று பார்த்துக்கொள்ளுங்கள்.

பல தரப்பிலிருந்து கேள்விக்கணைகள் பாய்ந்து வந்தாலும், விளையாட்டுப் போட்டியை நடாத்துபவர்கள் எப்படியும் அதை நடாத்திவிட முடியும் என்ற நம்பிக்கையுடன் இருக்கின்றனர். உலகத்தரம் வாய்ந்த விளையாட்டு மைதானங்கள் உரிய நேரத்தில் தயார்படுத்தித் தரப்படும் என சுரேஷ் கல்மாதி திரும்ப உறுதி கூறுகிறார். "இது இந்தியாவில் கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்வது போன்றது. கால அளவில் குறைவாக இருந்தாலும் துரித கதியில் செயற்பட்டு எல்லா வசதிகளையும் செய்து கொடுப்போம்" என்று சமீபத்தில் கூறியிருக்கிறார் இந்திய விளையாட்டுத்துறை அமைச்சர் எம்.எஸ். கில்.



# வெள்ளை வான் கப்பக் காசுக்கு சுவிஸ் வங்கியில் ஆபத்தா?

சுவிஸ் வங்கியில் ரகசியக் கணக்கு உங்களுக்கு உள்ளதா என பெரிய பெரிய அரசியவாதிகளிடம் கேட்பது உண்டு. அந்த அளவுக்கு சுவிஸ் வங்கிகள் தங்களது வாடிக்கையாளர்களின் கணக்கு விபரங்களை ரகசியமாகப் பாதுகாக்கும். ஆனால், இனி எல்லாம் தலைகீழாக மாறப் போகிறதாம். இனிமேல் ரகசியம் காக்கப்படமாட்டாதாம்.

சுவிட்சர்லாந்தில் ரகசியச் சேமிப்புக் கணக்குகளை வைக்க வாய்ப்பளிக்கும் வங்கிகளில் தலையாயது எனக் கருதப்படுவது UBS வங்கிதான். வரி ஏய்ப்புக்காக யாராவது வெளிநாட்டினர் (குறிப்பாக அமெரிக்கர்கள்) இந்த வங்கியில் ரகசியமாக கணக்குத் தொடங்கியிருக்கும் பட்சத்தில் உரிய அதிகாரிகள் சந்தேகப்பட்டு விவரம் கேட்டால் கொடுக்கப்படும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

சமீபத்தில் அமெரிக்க அரசு வரிஏய்ப்புச் சம்மந்தமாக ஒரு விசாரணையை நடாத்தியது. அந்த விசாரணையின்போது பலரது வரிஏய்ப்புப் பணம் இந்த வங்கி மூலம் கணக்கில் வரவு வைக்கப்பட்ட விஷயம் அம்பலமானது. விஷயம் அமெரிக்காவில் தெரியவந்த உடனேயே இந்த மோசடிக்கு உடந்தையாக இருந்ததற்காக 780 மில்லியன் டொலர் அபராதம் செலுத்த இந்த வங்கி முன்வந்துள்ளது. எத்தனை பேர் மாட்டிக்கொண்டார்கள் என்பது இன்னும் சரியாகத் தெரியவில்லை.

நூற்றுக்கணக்கான வாடிக்கையாளர்களைப் பற்றியும் அவர்களது ரகசியக் கணக்குகள் பற்றி இந்த வங்கி அமெரிக்க உள்ளக வரிவிதிப்பு அலுவலகத்துக்குத் தெரிவித்திருக்கும் எனக் கருதப்படுகிறது.

வெளிநாட்டு வங்கிகளில் பணம் போட்டு வரி ஏய்ப்பு செய்தவர்களை எளிதில் கண்டுபிடிக்கும் வருமான வரி வல்லுநரான ஜேப் புலூம் "இனிமேல், ரகசியம் காப்பவை என எந்த சுவிஸ் வங்கிகளையும் யாரும் நம்பத் தயாராக இல்லை. இனி சுவிஸ் வங்கியில் ரகசிய கணக்கு வைத்துப் பணம் போட்டு எடுக்கலாம் என்பதெல்லாம் முடியாது. வங்கி வாடிக்கையாளர்களின் பெயர் விவரங்களை எல்லாம் இனி





சுவிஸ் வங்கிகள் ரகசியமாகப் பாதுகாக்கப் போவ தில்லை. அந்தக்காலம் மலையேறிவிட்டது" என் கிறார்.

அமெரிக்க நீதித்துறை UBS வங்கியிடம் ரகசியக் கணக்கில் பணம் போட்டுவைத்துள்ளவர்களின் பெயர்களைக் கூறும்படி அழைப்பாணை அனுப்பிய உடனேயே, கேட்ட பெயர் விவரங்களைத் தரு வதாக வங்கி ஒப்புக்கொண்டுள்ளது. அமெரிக்க நீதித்துறைக்கும் இந்த வங்கிக்கும் இடையே 'பின் னொரு காலத்தில் சட்ட நடவடிக்கைக்கு உடன் படுதல்' என்ற உடன்படிக்கையின்படி வங்கி வாடிக் கையாளர்களின் ரகசியக் கணக்கு விவரங்களில் ரகசியம் காக்கப்படுவது வங்கியின் வாடிக் கையாளர்களைப் பொறுத்தவரை இப்போது கேள்விக்குறியாகி விட்டிருக்கிறது. இதற்காக இந்த வங்கியின் அலுவலர்கள் வங்கியில் கோடிக் கணக்கில் முதலீடு செய்திருந்த வாடிக் கையாளர்களின் கண்டனத்திற்குள்ளாக வாய்ப்பு உள்ளது.

குறிப்பிட்ட சில ரகசியக் கணக்கு விபரங்களைத் தரும்படி கடந்தமாதம் முதன்முறையாக அமெரிக்க நீதியமைச்சு கேட்டபோது வங்கி ஆரம்பத்தில் நழுவப் பார்த்தது. தகவல் கோரப்பட்ட அமெரிக்க வாடிக்கையாளர்களின் ரகசியக் கணக்குகளை வருட இறுதித் தணிக்கை முடித்துக்கொண்டிருப்பதாகவும் அது முடியும்வரை எந்த விபரமும் முழுமையாக இராது என்றும் கூறிப்பார்த்தது. ஆனால், அமெரிக்க நீதியமைச்சு இதை ஏற்கத் தயாராக இல்லை. இறுதித் தணிக்கை முடிக்கப்படும் முன்னரே வங்கிக் கணக்குகள் சம்பந்தப்பட்ட ஆவணங்களை தம்மிடம் தர வேண்டும் என வற்புறுத்தியது. அதையடுத்து வங்கிக்கு வேறு வழி இருக்கவில்லை.

2002ம் ஆண்டு முதல் 2007ம் ஆண்டு வரை அமெரிக்கர்கள் ஆண்டுக்கு 30 கோடி டொலர் வரை வரி ஏய்ப்புச் செய்யும் விதமாக 20 பில்லியன் டொலர் அளவுக்கு இந்த வங்கியில் ரகசியச் சேமிப்புக் கணக்குகள் தொடங்கியிருந்ததாகக் குற்றம் சாட்டப்படுகிறது. 2000 முதல் 2007ம் ஆண்டு வரை அமெரிக்காவை வரி ஏய்ப்புச் செய்ய சுவிஸ் தனி யார் வங்கிகள் உதவின என்று UBS ஒப்புக் கொண்டுள்ளது. அமெரிக்க வங்கி நடைமுறையில் சில வரி கட்டப்பட்ட பற்றுச்சீட்டுகளை வங்கி வாடிக்கையாளர்கள் கட்டாயம் பூர்த்தி செய்து கொடுக்க வேண்டும். அமெரிக்கப் பிரஜைகள் வெளி நாட்டு வங்கிகளை உபயோகித்து முதலீடு செய்யும் போதும் பின்பற்ற வேண்டும் என்பதே அமெரிக்கச் சட்டம். ஆனால் இந்த நடைமுறையை அமெரிக்கப் பிரஜைகள் சுவிஸ் வங்கிகளில் பணத்தைப் போடும் போது சுவிஸ் வங்கிகள் நிர்ப்பந்திக்கவில்லை.

Lugano, Zurich, Geneva ஆகிய நகரங்களில் சுமார் 60 தனியார் வங்கிகள் மூலம் UBS இந்த வெளி நாட்டவர் ரகசிய வங்கிக் கணக்குகளை உருவாக்கி யிருந்தது. அமெரிக்க உள்ளக வரிவிதிப்பு அலுவல கத்திலிருந்து சொத்து மதிப்பை மறைக்கும் வித்தை

தெரிந்த சில வெளிநாட்டு நிறுவனங்களின் சட்டத் தரணிகள், கணக்கீட்டாளர்களைச் சந்திக்கும்படி தனது வாடிக்கையாளர்களை UBS கை காட்டி விடுமாம்.

சில அமெரிக்கர்கள் ரகசிய வங்கிக் கணக்குத் தொடங்கும்போது அவர்கள் கொண்டு வந்திருந்த பணத்திற்கான ஆவணங்களை அழித்துவிடும் படியும், பணத்தை மறைவாக எடுத்துவரப் பயன் படுத்திய பொருட்களை சுவிட்சர்லாந்து வங்கி களின் பாதுகாப்புப் பெட்டகங்களில் மறைத்து வைத்திருக்கும்படியும், UBS வற்புறுத்துமாம். அமெரிக்க உள்ளக வரிவிதிப்பு அலுவலகத்தின் கவனத்தைத் திசை திருப்புவதற்காக, வங்கிகளால் கொடுக்கப்பட்ட கிரெடிட் கார்ட்களையே பயன் படுத்தும்படி வெளிநாட்டு வாடிக்கையாளர்கள் சுவிஸ் வங்கிகளால் ஊக்குவிக்கப்படுகிறார்கள்.

அமெரிக்க விசாரணை அமைப்புகளாலும் உள் நாட்டு தணிக்கை அமைப்புகளாலும் கண்டறியப் பட்டு கண்டுபிடிக்கப்பட்ட பல சம்பவங்களில் UBS தனது குற்றத்தை ஒப்புக்கொண்டிருக்கிறது. பிடி பட்ட வழக்குகள் தொடர்பாக முறையாக மன்னிப்புக் கேட்டுக்கொண்டோம் என UBSன் தலைவர் பீற்றர் குரெர் கடந்த புதன்கிழமை ஓர் அறிக்கையில் தெரிவித்துள்ளார். இதே நிறு வனத்தின் தலைமை நிர்வாகி மார்செல் ரோஹ்னர், “வங்கி நடைமுறைகளில் கோளாறு இருந்ததால் தான் இந்தத் தவறுகள் தெரியாமல் போய்விட்டது. அதனால், சில தவறு நடந்துள்ளது உண்மை என ஒப்புக்கொள்கிறோம்” என்று கூறியிருக்கிறார்.

குறிப்பிட்ட ஒரு நபரின் வரி ஏய்ப்பு வழக்கு விசாரணையில் UBSன் மூத்த அதிகாரி ராஃவூல் வெய்ல் குற்றவாளி என அமெரிக்க நீதிமன்றம் 2 மாதங்களுக்கு முன் தீர்ப்பளித்திருந்தது. அதை யடுத்து கடந்த மாதம், அவர் நீதிக்குப் புறம்பாக நடந்துவிட்டார் என வங்கியால் பகிரங்கமாக அறி விக்கப்பட்டது.

சுவிஸ் சட்டத்தைப் பொறுத்தவரை அதில் வரி ஏய்ப்பு, வரி மோசடி, வரிகட்டத் தவறுதல் எனத் தெளிவாக ஒவ்வொரு குற்றச்செயலும் வகைப் படுத்தப்பட்டுள்ளது. ஆனால் அந்தச் சட்டம் சுவிஸ் பிரஜைகளுக்கு மாத்திரமே பொருந்தும் என்றே வங்கிகள் கூறிவந்தன.

அமெரிக்காவில் 2002ம் ஆண்டு முதல் 2007ம் ஆண்டு வரை நடைபெற்ற வரி முறைகேடுகள் தொடர்பான விஷயங்களை அமெரிக்காவில் வசிக்கும் சுவிஸ் பிரஜையான வெய்ல் என்பவர் உன்னிப்பாகக் கவனித்து வந்திருக்கிறார். அவரது மூலமே இந்தப் பிரச்சினை அம்பலத்திற்கு வந் துள்ளது. ஆரம்பத்தில் UBS அமெரிக்க விசாரணை அமைப்புகள் கூறிய எதையும் (சிலருக்குத் தண்டனை விதிக்கப்பட்ட நிலையிலும்கூட) உண்மை என ஒப்புக்கொள்ள மறுத்து வந்தது. ரகசியக் கணக்கு வைத்திருந்தவர்களின் பெயர் களைப் பகிரங்கமாக வெளியிட மறுத்து வந்தது.

அமெரிக்கப் பிரஜைகளுக்கு வரி ஏய்ப்பு என்பது அமெரிக்காவில்தான் தண்டனைக்குரிய குற்றம். சுவிட்சர்லாந்தில் அது குற்றச்செயல் அல்ல என்றே கூறிக்கொண்டிருந்தது.

தற்போது கண்டுபிடிக்கப்பட்ட வரி ஏய்ப்பு வழக்கு களின் காரணமாக UBS மொத்தம் 780 மில்லியன் டொலர் அபராதம் செலுத்த வேண்டி யுள்ளது. அதில் 380 மில்லியன் டொலர் தற்போது மாட்டிக் கொண்டிருக்கும் அமெரிக்கர்கள் தொடங்கிய ரகசிய கணக்குகள் மூலம் வங்கிக்குக் கிடைத்த லாபம். 780 மில்லியன் டொலரில் வட்டி, அபராதம், வரி செலுத்தாததற்காகச் செலுத்தப்படும் நஷ்டஈடு ஆகி யனவும் அடங்கும்.

அமெரிக்கர்கள் ரகசியமாக வங்கிகளில் பணம் போட்டுவைக்கப் பதிவுபெறாத தரகராகவும் முத லீட்டு ஆலோசகராகவும் UBS செயற்படும் என இந் நிறுவனம் அமெரிக்காவில் விளம்பரங்களைச் செய்துவந்தது. இதுவே இந்த நிறுவனத்திற்கு ஆபத் தாக முடிந்திருக்கிறது.

பசில் மற்றும் கோத்தபாயவின் கணக்குகள் எந்த வங்கியில் இருக்கிறது என்று விசாரிக்க வேண்டும். ஒருவேளை வெள்ளை வான் கப்பத் தொகைக்கு அமெரிக்காவில் வரிவிலக்கு இருக்கிறதா என்ப தையும் விசாரிக்க வேண்டும்.



ஒவ்வொரு நாட்டின் வெற்றிக்குப் பின்னரும் ஒரு சோக வரலாறு இருக்கும். இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் ஜேர்மனியில் உயிரிழந்தவர்களின் சோகக் கதைதான் இது.

அது ஒரு பாழடைந்த கட்டடம். ஈரக்கசிவுடன் வலுவிழந்துள்ள மண் சுவர். அந்தச் சுவரில் கால் தொடை எலும்புகள் வெளியே பிதுங்கிக் கொண்டு நிற்கின்றன. ஓர் இரும்புக் கம்பியை வைத்து அச்சுவரில் ஓங்கிக் குத்தினோமேயானால், அது பொலபொலவென உதிர்ந்து விடும். இதற்கு அடியில்தான் 2,000 பேர் புதைந்து கிடந்துள்ளனர். தற்போது அவர்களது எலும்புகள் மிச்சமாகிக் காட்சியளிக்கின்றன.

இவர்கள் எல்லாம் ஜேர்மனியர்கள். இரண்டாம் உலகப் போர் முடியும் தறுவாயில் தமது உயிரை நீத்தவர்கள். இங்குள்ள கோட்டை ஜேர்மனியரின் வரலாற்றைக் கூறும்.

இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் இப்பகுதி போலந்துக்கு அளிக்கப்பட்டு விட்டது. அதற்குமுன் ஜேர்மனியின் ஒருபகுதியாக இருந்த மெரியென் பேர்க்கில் இருந்த நகரமான மல்பேர்க்கிலேயே இந்தப் பாழடைந்த கட்டடம் இருக்கிறது. இங்கு இறந்து கிடந்த ஆண்கள், பெண்கள், குழந்தைகள் எல்லாம் இப் பகுதியில் வசித்தவர்கள். தற்போது கலினின்கிரேட் என அழைக்கப்படும் பகுதியில் இருந்து அகதிகளாக வந்தவர்களும் இதில் அடங்குவர்.

பேர்லினைக் கைப்பற்றுவதற்காக சோவியத் ரஷ்யா மீண்டும் தாக்குதல் நடாத்தியபோது இவர்கள் எல்லாம் அகதிகளாக வந்தவர்கள். இங்கு காணப்படும் ஏராளமான மண்டை ஓடுகளில் துப்பாக்கிக் குண்டுகள் பாய்ந்த அடையாளங்கள்

# கண்டுபிடிக்கப்பட்ட புதைகுழிக்குள் 2000 எலும்புக்கூடுகள்



காணப்படுகின்றன.

இப் பகுதியில் முதல் சடலம் கடந்த ஒக்டோபரில் கண்டெடுக்கப்பட்டது தற்செயலாகத்தான். மேலும் தோண்டிப் பார்த்தபோது ஏராளமான சடலங்கள் காணப்பட்டதால், ஏராளமானோர் ஒரே இடத்தில் படுகொலை செய்யப்பட்டிருக்கலாம் என்ற வதந்தி பரவியது. அதன் பின்னர், பனி, வறுமை மற்றும் நோயால் இவர்கள் இறந்திருக்கக் கூடும் என்று தெரிவிக்கப்பட்டது. ஐரோப்பிய நாடுகளில் இதுபோன்ற ஒரே இடத்தில் ஏராளமான சடலங்கள் புதைந்து கிடப்பதைப் பல்வேறு இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டதால், கடந்த நூற்றாண்டில் இப்பகுதியில் வன்முறைகள் அதிகம் நிகழ்ந்திருக்கலாம் எனவும் ஊகிக்கப்பட்டது.

பின்னர் இவர்கள் கொல்லப்பட்டது இரண்டாம் உலகமகா யுத்தத்தில் ஜேர்மானியப் படைகளால்தான் என்ற விஷயம் தெரியவந்தபோது, இவ்வாறு கொல்லப்பட்டவர்கள் எல்லாம்



அப்பாவிப் பொதுமக்கள் அல்ல. கிளர்ச்சிக்காரர்கள் எனக் கூறிவிட்டது ஜேர்மனி.

“அது உண்மையல்ல. ஜேர்மனியின் கட்டுப்பாட்டில் முன்பிருந்த மல்போர்க் பகுதியில் காணப்பட்ட இச் சடலங்கள் எல்லாம் அப்பாவி பொதுமக் களுடையது. இவர்கள் எல்லாம் போரில்தான் இறந்திருக்கக் கூடும். இச்சம்பவத்தை நாம் வேறுபடுத்திப் பார்க்க முடியாது” எனத் தெரிவிக்கிறார் *30* வயதான ராட்டோசிலா காஜே. மல்போர்க்கைச் சேர்ந்த இவர், தற்போது சடலங்களை அப்புறப்படுத்தும் பணியில் ஈடுபட்டுள்ளார்.

இப்பிரச்சினையை மிகவும் கவனத்துடன், முக்கி யத்துவம் கொண்டு பரிசீலித்து வருகிறோம். போரின் கடைசிக் கட்ட வேலைகள் எப்படி இருந்தன என்பது குறித்து தாம் ஓரளவுக்குத் தெரிந்து வைத்திருப்பதாகவும் அவர் கூறுகிறார்.

இங்கு இறந்து கிடப்பவர்களைப் பார்க்கும்போது அவர்கள் மீது அதிகப் பரிவு ஏற்படுகிறது எனத் தெரிவிக்கிறார் German War Graves Commission செய்தித் தொடர்பாளரான ஃபிரிட்ஜ் க்ர்ச்மெரிர். இவர் தமது சகாக்களுடன் மல்போர்க் பகுதியில் கடந்த வியாழக்கிழமை சுற்றுப்பயணம் மேற்கொண்டு, அங்கு கிடக்கும் சடலங்களை என்ன செய்வது என்பது குறித்து அந்நகர அதிகாரிகளிடம் ஆலோசனை மேற்கொண்டார்.

ஏற்கெனவே உள்ள மயானத்தில் அவர்களைப் புதைப்பது அல்லது நகரில் ஓரிடத்தில் அனைவருக்கும் கல்லறை அமைப்பது என முடிவு செய்யப்பட்டது. இரண்டாவது உலகப் போரில் கொல்லப்பட்ட ஜேர்மனியர்களை செக் குடியரசில் உள்ள சீப் என்ற நகரில் உள்ள மயானத்தில் அடக்கம் செய்யும் முயற்சிகளை German War Graves Authority மேற்கொண்டு வருகிறது.

க்ர்ச்மெரிர் கடந்த *16* ஆண்டுகளாக இந்த வேலையில், இதுதொடர்பான ஊழியர்களுடன் ஈடுபட்டு வருகிறார். போரில் இறந்த சுமார் *20* லட்சம் பேரை அடக்கம் செய்யும் வேலையை *800*க்கும் மேற்பட்ட மயானங்களில் மேற் கொண்டுள்ளார்.

“ஜேர்மன் மற்றும் போலந்து அரசுகள் மீண்டும் ஒருமுறை கூடி வீட்டை விட்டு வெளியேறிய ஜேர்மனியர்களின் நிலை குறித்து விவாதிக்க வேண்டும் இதுகுறித்து போலந்து பிரதமர் டோனால்ட் டஸ்க்குடன் ஜேர்மன் தலைவர் ஏற்கெனவே பேச்சுவார்த்தையில் ஈடுபட்டுள்ளார்.



ஜேர்மனியில் உள்ள ஹம்பேர்க் நகரில் வெள்ளிக்கிழமை அவர்கள் சந்தித்தபோது இது குறித்து விவாதிக்கப்பட்டது" என அவரது செய்தித் தொடர்பாளர் ஏஞ்ஜலா மெர்கில் தெரிவித்துள்ளார்.

இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர், சுமார் 1.2 கோடி பூர்வீக ஜேர்மனியர்கள் மத்திய மற்றும் கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்கு இடம்பெயர்ந்து விட்டனர் என்றும், சுமார் 20 லட்சம் பேர் நடைபெற்ற பல்வேறு வன்முறைச் சம்பவங்களில் இறந்திருக்கலாம் அல்லது கொல்லப்பட்டிருக்கலாம் என்றும் கூறப்படுகிறது. ஹிட்லர் ஆட்சிக்கால நிகழ்வுகளும், ஏராளமானோர் ஒரேயிடத்தில் புதைக்கப்பட்டிருந்த சம்பவம் குறித்தும் ஜேர்மனியப் பத்திரிகைகள் செய்தி வெளியிட்டிருந்தன.

"ஹிட்லர் ராஜ்ஜியம் மிகவும் கொடுமையானது" எனத் தெரிவிக்கிறார் பிரிட்டிஷ் வரலாற்று ஆய்வாளரான கில்ஸ் மக்டொனோ. இவர் After the Reich என்ற நூலை எழுதியுள்ளார். இதில் போருக்குப் பின்னர் ஜேர்மனிய மக்கள் பட்ட துன்பங்களை விரிவாக விவரித்துள்ளார்.

மல்பேர்க்கில் ஒரேயிடத்தில் ஏராளமானோர் புதைக்கப்பட்டது, ஓர் ஆடம்பர ஹோட்டல் கட்டுவதற்காகக் கட்டுமான வேலையை மேற் கொண்டபோது தெரியவந்தது. அப்பகுதியில் நவீன வசதி கொண்ட ஹோட்டல்கள், நீரூற்று ஆகியவற்றை அமைத்து அப் பகுதியை மேம்படுத்தத் திட்டமிட்டிருந்தனர்.

இத்தகைய ஏராளமான சடலங்கள் காட்டுப் பகுதியிலோ அல்லது விவசாய நிலங்களிலோ புதைக்கப்படவில்லை. போலந்தில் சுற்றுலாப் பயணிகளைக் கவரும் வரலாற்று சிறப்பு வாய்ந்த ஓரிடத்தில்தான் இந்த சடலங்கள் புதைக் கப்பட்டிருந்தன.

முதலில் 70 எலும்புக் கூடுகளைக் கண்டெடுத்தனர். அவற்றை உள்ளூர் மயானம் ஒன்றில் புதைத்தனர். பின்னர் அப் பகுதியில் பெய்த மழை, மண்ணைப் புரட்டிப் போட்டது. இதையடுத்து, ஏராளமான எலும்புகள், மண்டை ஓடு ஆகியவை வெளியே தெரிய ஆரம்பித்தன. இதையடுத்து, அப் பகுதியைத் தோண்டும் வேலையைத் துரிதப்படுத்தினர். இந்த வாரம் வரை சுமார் 1,900 பேரின் எலும்புகள், மண்டை ஓடுகள் உள்ளிட்டவை தோண்டி எடுக்கப்பட்டுள்ளன.

இறந்தவர்கள் அனைவரும் நிர்வாணமாகப் புதைக்கப்பட்டுள்ளனர். அவற்றில் கண்ணாடிகளும் இருந்தன. இறந்தவர்கள் யார் என்பதை அறுதியிட்டுச் சொல்ல முடியாது. இந்தச் சடலங்கள் எல்லாம் ஜேர்மனியர்கள் என்பது மட்டும் தெரிந்தது.

இவர்களில் பெரும்பாலோர் பொதுமக்கள், வீரர்கள் அல்ல என தொல்லியல் ஆய்வாளரான ஜிபிக்நியூ சாய்கி தெரிவித்துள்ளார். மேலும், இறந்தவர்களில் போர் சமயத்தில் இப்பகுதியில் வசித்த போலந்து நாட்டைச் சேர்ந்தவர்களும் அடங்குவர் என்றும் அவர் தெரிவித்துள்ளார்.

# தள்ளாடுகிறது தான் ஆனால் தரையில் விழாது!



உலகம் முழுவதுமே செல்போன் விற்பனை வேக மாகச் சரிவைச் சந்தித்து வருகிறது. எனவே, செல்போன் தயாரிப்பு நிறுவனங்கள் தங்களது உற்பத்தியைக் குறைக்க லட்சக்கணக்கான வேலை இழப்புக்களை அறிவித்து வருகின்றன.

“வயர்லெஸ் அடிப்படையிலான செல்போன்களைச் சந்தையில் விற்பது கடினமாக இருக்கிறது. இவற்றை ஒருமுறை வாங்கிய வாடிக்கையாளர்கள் மறுமுறை வாங்குவதில்லை. நிலைமை இப்படியே போனால் மந்த நிலையைத்தான் இந்தத் துறை சந்திக்க நேரிடும். ஆனால், சில காலம்தான் இந்தச் சுணக்கம். பின்னர் சிறப்பான எதிர்காலம் இருக்கிறது” என வல்லுநர்கள் கணித்திருப்பது சற்று ஆறுதலான விஷயமாக இருக்கிறது.

எனவே, தற்போதைய விற்பனைக் குறைவை பெரிய பிரச்சினையாகக் கருத வேண்டியதில்லை என்பதே சந்தையில் பலமாக அடிபடும் பேச்சாக இருக்கிறது. உலகில் முக்கால்வாசிப்பேர் செல்போன் பயன்படுத்துகின்றனர். செல்போன் இல்லையென்றால் அவன் மனிதனே இல்லை என்ற அளவுக்கு செல்போன் பயன்பாடு ஓர் அந்தஸ்துப் பிரச்சினையாகிவிட்டது. எனவே, வயிற்றுக்கு உணவு இல்லையென்றாலும் பரவாயில்லை, செல்போன் வாங்கு என்பது தனிமனித தாரக மந்திரமாகி விட்டது. எனவே, இந்தச் சுணக்கம் விரைவில் மாறிவிடும் என்கின்றனர்.

வளர்ந்து வரும் நாடுகளில் செல்போன் பயன்படுத்தாதவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது. அங்கெல்லாம் போனுக்கு மிகச் சொற்ப அளவில்தான் செலவழிக்கின்றனர். எனவே, அங்கு கவனம் செலுத்தினால் புதிய வாடிக்கையாளர்கள் எண்ணிக்கையைப் பெருக்கிட வாய்ப்பு உள்ளது என்பது சந்தை வல்லுநர் Craig Moffett என்பவரது கருத்து. வயர்லெஸ் அடிப்படையிலான செல்போன் விற்பனையின் பொற்காலம் மலையேறிவிட்டது எனச் சிலர் கூறுவதைத் தன்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்கிறார் அவர்.

வட அமெரிக்காவில் செல்போன் வாடிக்கையாளர்களின் எண்ணிக்கை உச்சகட்டத்தை எட்டிவிட்டது. எனவே, இனிமேல், விற்காது, இதனால், சங்கிலித் தொடர் பாதிப்பு ஏற்படும் எனக் கூறுவது தவறு. தற்போது உலக அளவில் பொருளாதார மந்த நிலை உள்ளது. இது மாறி சுபிட்சம் ஏற்பட்டதும் செல்போன் விற்பனை மீண்டும் அதிகரிக்கும் என்கிறார் அவர்.

மோட்டாரோலா நிறுவனத்தில் காலாண்டு வருவாய் அறிக்கை அண்மையில் வெளியிடப்பட்டது. கடந்த ஆண்டு இதே காலகட்டத்துடன் ஒப்பிடுகையில், இந்த நிதியாண்டின் 4வது காலாண்டில் இந்நிறுவனத்திற்கு 36 கோடி டொலர் நஷ்டம் ஏற்பட்டுள்ளது. எனவே, இந்நிறுவனப் பங்குகளில் முதலீடு செய்தவர்களுக்கு இந்தக் காலாண்டிற்கு லாபத்தில் பங்குத்தொகை வழங்குவதைத் தற்காலிகமாக நிறுத்தி வைத்துள்ளதாக அறிவிக்கப்




பட்டுள்ளது. இந்தக் காலாண்டில் இந்நிறுவனம் 192 கோடி செல் போன்களை விற்பனை செய்துள்ளது. கடந்த ஆண்டு இதே காலகட்டத்துடன் ஒப்பிடும்போது 53 சதவீதம் விற்பனை சரிந்துள்ளது.

இப்போதெல்லாம் செல்போன் தயாரிப்பு நிறுவனங்களைப் பற்றி யாரும் அதிகமாகக் கண்டு கொள்வதுமில்லை. ஒப்பிட்டுப் பார்ப்பதும் இல்லை. இந்தத் துறையில் கோடிக்கணக்கில் முதலீடு செய்யப் பட்டு வருகிறது. கோடிக்கணக்கில் செல்போன்கள் தயாரித்து விற்கப்படுகின்றன. செல்போன் தகவல் தொடர்புக் கட்டமைப்புச் சேவைகள் அளிக்கப் படுகின்றன. புதிய தலைமுறையினர் அதிகமாக செல் போன்கள் வாங்குவர் என இந்தத்துறையினர் பெரிய அளவில் நம்பிக்கை வைத்துள்ளனர்.

குறிப்பாக கணணிமயத் தகவல்கள் வைத் திருப்பவர்கள் தகவல் பரிமாற்றத்திற்கு இத் துறை யையே பெரிதும் நம்பியிருக்க வேண்டியிருக்கிறது எனக் கருதுகின்றனர். புதிய இளம் தலை முறையினர் அதிகம் செலவு செய்யத் தயங்கா தவர்கள், அதற்குரிய சக்தி, உள்ளவர்கள். அது மட்டுமில்லாமல் புதிய வசதிகள் கொண்ட ஸ்மார்ட் போன்களை ஆயிரக்கணக்கில் பணம் கொடுத்து வாங்கத் தயங்காதவர்கள் என்ற குணாதிசயம்தான் செல்போன் தயாரிப்பு நிறுவனங்களின் நம்பிக் கைக்கு அடித்தளமாக உள்ளது.

இந்த நிதி ஆண்டின் 4வது காலாண்டில் மட்டும் AT&T நிறுவனம் 19 லட்சம் iPhoneகளை ஆக்டி வேட் செய்துள்ளது. Verizon நிறுவனம் 10 லட்சத் திற்கும் அதிகமான BlackBerry செட்களை விற் பனை செய்து சந்தையில் புயலைக் கிளப்பியுள்ளது. இந்த விற்பனை அமெரிக்காவின் மொத்த செல் போன் சந்தையின் விற்பனையில் சுமார் 10 சதவீதம்.

இந்த அளவுக்கு விற்பனை நடந்திருப்பது, சந்தை யில் புதிய வசதி பொருட்களின் புகழைக்கூட்டி அவற்றைப் பிரபலப்படுத்தும் என்பது நிச்சயம். இதனால், பழைய வாடிக்கையாளர்கள் புதிய வசதிகள்கொண்ட செல்போன், BlackBerry என வாங்குவார்கள் என எதிர்பார்க்கப்படுகிறது. பாடல் களைத் தரவிறக்கும் செய்வதற்கும் தகவல்களை இந்தக் கருவிகள் மூலம் குறைந்த செலவில் அனுப்ப முற்படுவர் எனவும் எதிர்பார்க்கப்படுகிறது.

"இந்தக் காலாண்டில் AT&T நிறுவன வாடிக்கை யாளர்கள் ஒவ்வொருவரது அச்சுத் தகவல் பரி மாற்றச் செலவு 27 சதவீதத்திற்கும் அதிகமாக உயர்ந் திருக்கிறது. இதனால், இந்நிறுவன வருவாய் கூடியி ருக்கிறது. ஆக இந்தத்துறை பின்னடவைச் சந்திக்க வில்லை என்பது தெரிகிறதல்லவா? எமது நிறுவன வாடிக்கையாளர்கள் புதுவகைப் போன்களை வாங்க விரும்புகிறார்கள். எனவே, எங்களது விற்பனை உயரும் என்ற நம்பிக்கை எங்களுக்கு உள்ளது" என் கிறார் Verizon செல்போன் தயாரிப்பு நிறுவனத்தின் தலைவர் Denny Strigl (அமெரிக்க செல்போன் சந்தையில் இந் நிறுவனத்தில் பங்கு 55 சதவீதம்.

வோடபோன் நிறுவனத்தின் பங்கு 45 சதவீதம்).




Verizon மற்றும் அதன் முக்கிய போட்டி நிறுவனமான AT&T ஆகியன கடந்த வாரம் தங்களது காலாண்டு நிதிநிலை அறிக்கையை வெளியிட்டுள்ளன. அதிக உற்பத்தியை நிலைநிறுத்த என்னென்ன சவால்கள் தடையாக உள்ளன என அவை தெரிவித்துள்ளன. Verizon நிறுவனத்திற்கு இந்தக் காலக்கட்டத்தில் 14 லட்சம் புதிய வாடிக்கையாளர்கள் கிடைத்துள்ளனர். ஆனால், கடந்த ஆண்டு 20 லட்சம் புதிய வாடிக்கையாளர்கள் கிடைத்திருந்ததுடன் ஒப்பிடும்போது இந்த எண்ணிக்கை குறைவுதான். AT&T நிறுவனத்திற்கு கடந்த ஆண்டு கிடைத்ததைவிட இந்த ஆண்டு கிடைத்த புதிய வாடிக்கையாளர்களின் எண்ணிக்கை (27 லட்சம்) 7 லட்சம் தான் குறைவு. அமெரிக்காவில் உள்ள மற்றொரு பிரதான செல்போன் சேவை நிறுவனமான Sprint Nextel 8000 பேரை வேலையைவிட்டு அனுப்ப விருப்பதாக சமீபத்தில் அறிவித்துள்ளது.

அதிக அளவில் தகவல் பரிமாற்றம் நடப்பது, கவர்ச்சிகரமான வடிவில் செல்போன்களை தயாரிப்பது ஆகியன மூலம் செல்போன் விற்பனையைக் குறையாமல் பார்த்துக்கொள்ளலாம் என்பது இந்தத் துறை வல்லுநர்களின் கருத்து. “இந்தத் துறையில் செலவிட பெருமளவு பணம் குவிகிறது. மக்களும் எதிர்காலத் தேவை கருதி அதிக செல்போன்கள் வாங்குவதை நிறுத்தாமல் இருந்தால் வியாபாரம் கொடிகட்டிப் பறக்கும். பணம் படைத்தவர்கள் அதிக செல்போன்களை வாங்கும் மனம் படைத்தவர்களாகவும் இருக்க வேண்டுமே என்கிறார் Charter Equity ஆய்வு நிறுவன வல்லுநரான Ed Snyder.

ஸ்மார்ட் போன்கள் எதிர்காலத்தில் அதிகம் விற்பதற்குத் தடையாக உள்ள முக்கிய அம்சம் அதன் விலை மிக அதிகமாக இருப்பதுதான். சாதாரண Apple iPhone ஒன்றின் விலை 600 டொலர். இதற்கு முன்பெல்லாம் மானியம் இருக்கும். அது இந்த விலையில் சேராது. இதேபோல, Motion நிறுவனத்தின் BlackBerry 300 டொலருக்கு விற்கப் படுகிறது. மோட்டரோலா, சாம்சங் நிறுவன செல்போன்களின் விலை சராசரியாக 120 டொலராகும். இந்த செல்போன்களின் விலையில் காணப்படும் வித்தியாசம் காலப்போக்கில் சமன்பட்டுவிடும் எனக் கருதப்படுகிறது. இருப்பினும் விலை சற்று கூடுதலாக இருந்தாலும் வசதிகள் அதிகம் உள்ள செல்போன்களை வாங்க வேண்டும் என்ற வாடிக்கையாளரின் மனநிலைதான் செல்போன் உற்பத்திக்கு மூலகாரணமாக இருக்கிறது.

smart போன்கள் பெரும்பாலும் hardwareகளைவிட softwareகளையே அதிகம் நம்பி விலைபோகின்றன. புதிது புதிதாக வரும் மென்பொருட்கள்தான் குறிப்பிட்ட செல்போனை வாங்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டுவனவாக உள்ளன. iPhone அறிமுகம் செய்யும்போது Apple நிறுவனத் தலைமை அதிகாரி Steve Jobs 2007ம் ஆண்டு பேட்டியளித்திருந்தார்.

அப்போது iPhoneஐ தவிர மற்ற எல்லா செல்போன்களும் hardwareகளை மட்டுமே நம்பியிருந்தன. எனவே, மென்பொருளை அடிப்படையாகக் கொண்ட iPhoneஐ அறிமுகம் செய்வதை அவர் பெருமையாகக் குறிப்பிட்டிருந்தார். அடுத்த 6 மாதங்களில் iPhone விற்பனை எப்படியிருக்கும் எனக் கேட்டபோது இன்னும் 6 மாதங்களில் எந்தவொரு போனையும் மிஞ்சும் அளவுக்குப் iPhone சந்தைக்கு வந்துவிட்டது எனப் பெருமிதத்தோடு கூறினார்.

ஆனால், உலகின் முக்கிய பகுதிகளில் iPhone விற்பனை இன்றுவரை விறுவிறுப்பாக இல்லை.

செல்போன்களின் விற்பனையும் உலகப் பொருளாதார மந்தநிலை தொடங்கும் முன்பே வீழ்ச்சியடையத் தொடங்கிவிட்டது. முக்கியமான ஐரோப்பிய நகரங்களில் விற்பனையே படுத்துவிட்டது. குறிப்பாக மேற்கு ஐரோப்பாவில் 2007ம் ஆண்டு மொத்தம் 19.1 கோடி செல்போன்கள்தான் விற்றன.

அமெரிக்காவில் 2007ம் ஆண்டு 17.6 கோடி செல்போன்கள் விற்றன. 2008ம் ஆண்டு இந்த அளவு 18.4 கோடியாக உயர்ந்தது. இந்த ஆண்டும் இதே அளவுக்கு விற்பனை இருக்கக் கூடும் எனக் கணிக்கப்பட்டுள்ளது. Gartner ஆய்வு நிறுவனத்தைச் சேர்ந்த Carolina Smith "அமெரிக்காவில் விற்பனை எப்படி இருக்கும் என்பதை உணர்த்தும் விதமாக ஐரோப்பாவின் விற்பனை இருக்கிறது" என்கிறார்.

இந்த ஆண்டு அமெரிக்காவின் விற்பனை ஐரோப்பிய விற்பனை அளவைவிட சற்று குறைவாகத்தான் இருக்கும் என்பது அவரது கணிப்பு.

2007ம் ஆண்டு 4வது காலாண்டில் விற்றதைவிட 2008ம் ஆண்டு அதே காலகட்டத்தில் தமது செல்போன்கள் பாதியளவுக்குத்தான் விற்பனையானது எனக் கடந்த மாதம் மோட்டரோலா நிறுவனம் தெரிவித்தது. இதனால், தனது செல்போன் தயாரிப்புப் பிரிவில் 3000 பேரை வேலையை விட்டு நிறுத்திவிட்டது அந்த நிறுவனம். 2008ம் 4வது காலாண்டில் நோக்கியா நிறுவனம் 11.3 கோடி செல்போன்களை விற்றது. 2007ம் ஆண்டு இதே காலகட்டத்தின் விற்பனை அளவைவிட சுமார் 15 சதவிகிதம் குறைவு.

2009ம் ஆண்டு செல்போன்களின் உலகத் தேவை சுமார் 10 சதவீதம் குறையக்கூடும் என்கிறது சாம்சங் எலக்ட்ரானிக்ஸ் நிறுவனம். புதிய நிறுவனங்களும் போட்டிக்கு வந்துள்ள இந்தக் காலக்கட்டத்தில் விற்பனை சரிகிறது என்கிறது அந்த நிறுவனம்.

2 ஆண்டுகளுக்கு முன் Apple நிறுவன smart போன்களை விட்டால் வேறு smart போன்கள் சந்தையில் இல்லை. ஆனால், இப்போது Palm நிறுவனம் ஸ்மார்ட் போனின் புது தலைமுறைக் கருவியை அறிமுகம் செய்துள்ளது. டெல் நிறுவனமும் இதையே அறிமுகம் செய்துள்ளது.

சந்தையின் மொத்த விற்பனையில் கடும்போட்டி நிலவுகிறது. 2009ம் ஆண்டுதான் குழப்பநிலை மாறி தெளிவு பிறக்கும் என நோக்கியா நிறுவனத் தலைமை நிர்வாகி Olli-Pekka Kallasvuo ஒரு மாநாட்டில் பேசு கையில் கூறினார்.



"இணையத் தளத்தைப் பயன் படுத்தும் செல்போன்கள், செல் போன் சேவைகள் மூலம் முன்னேற்றம் காண வாய்ப்பிருக்கிறது. இதனால், செல்போன் சந்தையில் புதிய அலையை ஏற்படுத்தி விற்பனையை அதிகரிக்க முடியும்.

இந்தத் துறையில் புதுமையைப் புகுத்துவது தொடர்கதையாக இருக்கும்" எனவும் அவர் முதலீட்டாளர்கள் மாநாட்டில் பேசியுள்ளார்.



டந்த சில வாரங்களாக சூடான் நாட்டைப் பற்றியும் நாட்டின் ஜனாதிபதியைப் பற்றியும் ஊடகங்களில் செய்தி வெளியாகி வருகின்றன. இலங்கையைப் போன்று தனது நாட்டு மக்களை கொன்றுகுவித்த நாடுகளின் பட்டியலில் சூடான் முதலிடத்தை வகிக்கிறது. ஆபிரிக்காவின் வடகிழக்குப் பகுதியில் அமைந்துள்ள, ஆபிரிக்கக் கண்டத்திலேயே அதிகப் பரப்பளவைக் கொண்ட சூடானின் வடக்குப் பக்கம் எகிப்து, வடகிழக்குப் பகுதியில் செங்கடல், கிழக்குப் பகுதியில் எத்தியோப்பியா, தென்கிழக்குப் பகுதியில் உகாண்டா, கென்யா ஆகிய நாடுகள் உள்ளன.

நாட்டின் ஜனாதிபதியாக இருப்பவர் ஓமர் ஹஸ்ஸன் அல்பஷீர். இவர் போரின்போது பல்வேறு குற்றங்களைச் செய்ததாக பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றம் மார்ச் 4ம் திகதி குற்றஞ்சாட்டியுள்ளது. தர்ஃபர் பகுதியில் நடந்த சண்டையின்போது பல்வேறு அராஜக நடவடிக்கைகளில் ஈடுபட்டதாக பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றம் மற்றும் ஐக்கிய நாடுகள் சபையின். பாதுகாப்புக் கவுன்சில் ஆகியவை தமது நாட்டுக்கு எதிராக மேற்கொண்ட நடவடிக்கைகளை மேற்கோள் காட்டி, எந்தப் பிரச்சினை வந்தாலும் அதைச் சந்திக்கத் தயாராக இருக்கிறோம் எனத் தெரிவித்தார். ஜனாதிபதியின் உரை நாடெங்கும் தொலைக்காட்சியில் ஒளிபரப்பப்பட்டது. சூடானின் தலைநகர் கார்டோமிலிருந்து இந்நிகழ்ச்சி ஒளிபரப்பப்பட்டது. வெளிர் நிற சூட் அணிந்திருந்த ஜனாதிபதி, ஏராளமானோர் முன்னிலையில் மேடை மேல் நின்றவாறு பேசினார்.

ஜனாதிபதி பஷீர் மனித உரிமைகளுக்கு மாறாக, போரின்போது கொலைக் கொடுமை, கற்பழிப்பு உட்பட பல்வேறு அராஜக செயல்களைச் செய்ததாக பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றம் குற்றம் சாட்டியுள்ளதாலும், தார்ஃபரில் வசித்த ஏராளமான அப்பாவிப் பொதுமக்களை அங்கிருந்து வெளியேறச் செய்தது உட்பட பல்வேறு குற்றச்

# ஜனாதிபதியைக் கைது செய்யும் உத்தரவில்
# ஜனாதிபதிதான் கையெழுத்துப் போட வேண்டும்

இவர் மீது குற்றம் சாட்டப்பட்டுள்ளது.

பன்னாட்டு நீதிமன்றம் குற்றம்சாட்டிய மறுநாள், அதாவது வியாழக்கிழமை அந்தக் கூற்றைக் கடுமையாக மறுத்தார் பஷீர். “நாம் யாருக்கும் பயந்துகொண்டு அடிமையாகவோ, வளைந்து கொடுக்கவோ போவதில்லை. காலனியாதிக்க ஆட்சியை இங்கு கொண்டு வர நினைப்பவர்களின் கனவெல்லாம் பலிக்காது” என ஆயிரக்கணக்கான பொதுமக்கள் திரண்டிருந்த கூட்டத்தில் வீர வேசமாக உரையாற்றினார் பஷீர். தனது கைத்தடியை வீசி மிகவும் ஆவேசமாக தனது எதிர்ப்பை வெளியிட்டார் பஷீர். பாதுகாவலர்களும் ஆதரவாளர்களும் அவரைச் சுற்றிப் பாதுகாப்பு வளையம் அமைத்தபடி நின்றிருந்தனர்.

“பன்னாட்டு நீதிமன்றம் வழங்கிய இந்தத் தீர்ப்பு சூடானில் மீண்டும் காலனியாதிக்கத்தைக் கொண்டு வருவதற்கான ஒரு முயற்சி என்றே தெரிகிறது. எத்தகைய வெளிசக்தி இங்கே வந்தாலும் அந்த சக்தியைக் கடுமையாக எதிர்ப்போம். எங்களை யாரும் தலைமையேற்று வழிநடாத்திச் செல்ல முடியாது. அநீதிக்கு எதிராகக் குரல் கொடுப்போம்” என்றும் ஜனாதிபதி பஷீர் தெரிவித்தார்.



செயல்களை பஷீர் செய்துள்ளார் என்று தெரி வித்துள்ளதாலும், பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்ற நீதிபதிகள் அளித்த தீர்ப்பையடுத்து, மேலை நாடுகளைச் சேர்ந்த பல்வேறு தொண்டு நிறுவ னங்களை அங்கிருந்து காலி செய்துவிட்டு உடனே புறப்பட வேண்டுமென சூடான் அதிகாரிகள் எச்சரிக்கை விடுத்தனர்.

தார்ஃபர் பகுதியில் வசித்த சுமார் 25 லட்சம் பேரை அவர்களது உடைமைகளையெல்லாம் விட்டு விட்டு அங்கிருந்து ஓடுமாறு விரட்டப்பட்டனர். மேலும், அரேபியர் அல்லாத பிரிவினைவாதிகளும் அரபு அரசு மற்றும் அரபு தீவிரவாதிகளுக்கும் இடையே எழுந்த மோதலில் சுமார் 3 லட்சம் பேர் கொல்லப்பட்டனர். இந்த மனித உரிமை மீறல் பிரச்சினை தொடர்பாக பலமுறை பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றம் வலியுறுத்தியும் அதை சூடான் அரசு பொருட்படுத்தவில்லை.

இந்தப் பிரச்சினையில் பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றம் தலையிடுவதை சூடான் அரசு விரும் பவில்லை. அதனால், நீதிமன்ற நடவடிக்கைகளை அரசு தவிர்த்து வந்தது. வாரண்ட் பிறப்பிக்கப்பட்ட நிலையில், பல்வேறு மனித உரிமை சார்ந்த அமைப்புகளை அழைத்து மிரட்டி வைக்க சூடான் அரசு அவசர ஏற்பாடுகளைச் செய்தது என தொண்டு நிறுவன அதிகாரி ஒருவர் தெரி வித்துள்ளார்.

சுமார் 10 அமைப்புகள் அரசிடமிருந்து கடிதங் களைப் பெற்றுள்ளன. அக்கடிதங்களில் உடனே இந் நாட்டிலிருந்து வெளியேற வேண்டும், அல்லது தங்களது நடவடிக்கைகளை நிறுத்த வேண்டும் எனத் தெரிவிக்கப்பட்டிருந்தது. பிரிட்டனைச் சேர்ந்த ஆக்ஃபேம் அறக்கட்டளையின் உரிமைத்தை சூடான் அரசு ரத்து செய்துள்ளது. இதனால், சுமார் 60,000 பேர் பாதிக்கப்படுவர் என்று இந்த அறக்கட்டளை நிர்வாகிகள் தெரிவித்துள்ளனர். அதேபோல, டச்சுப் பகுதியைச் சேர்ந்த மருத்துவர்கள் குழு, தெற்கு தார்ஃபர் பகுதியில் உள்ள பெரிய மருத்துவ முகாம் ஒன்றில் மருத்துவக் கடமைகளை மேற்கொண்டு வந்தனர். அவர்களை உடனே நாட்டை விட்டு வெளியேறுமாறு அரசு கூறியுள்ளது.

ஹேக்கில் உள்ள பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றம் தார்ஃபர் பகுதியில் பல்வேறு அராஜக நடவ டிக்கைகளில் ஈடுபட்டவர்கள் மீது 2002ம் ஆண்டிலேயே வாரண்ட் பிறப்பித்தது. மாநிலத் தலைவரை கைது செய்ய முதலில் வாரண்ட் பிறப்பிக்கப்பட்டது. இதற்கு முன்னர், போரின்போது குற்றச்செயல்களில் ஈடுபட்டுவோர் மீது விசாரணை நடாத்துவதற்காக அமைக்கப்பட்ட பிற நீதி மன்றங்கள், யுகோஸ்லோவியாவைச் சேர்ந்த சுலோபோடன் மிலோசெவிக், லைபீரியாவைச் சேர்ந்த சாள்ஸ் டெய்லர் ஆகியோருக்கு வாரண்ட் பிறப்பித்திருந்தன.

பன்னாட்டு நீதிமன்றம் வழங்கியுள்ள இந்தத் தீர்ப்புக்குக் கடும் கண்டனம் தெரிவிக்கிறோம் என்று ஐக்கிய நாடுகளுக்கான சூடான் தூதர் அபல்மகமூத் அப்டஹலீம் தெரிவித்துள்ளார். மேலும் இங்கு செயற்படும் தொண்டு நிறுவனங்களுடன் இணைந்து அரசால் நீண்ட காலம் செயற்பட முடியாது என்றும் அவர் தெரிவித்துள்ளார். “இந்தத் தொண்டு நிறுவனங்களின் நடவடிக்கை இங்கு ஆட்சி மாற்றத்தை ஏற்படுவதற்கு வேண்டிய வேலைகளைச் செய்வதாக உள்ளது. இதற்கெல்லாம் நாங்கள் ஒத்துக்கொள்ள மாட்டோம். அடி பணிய மாட்டோம்”

இதற்கிடையே, சூடான் ஜனாதிபதிக்கு எதிரான பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றத் தீர்ப்பை சூடானில் இருந்து செயற்படும் தொண்டு நிறுவனங்கள் வரவேற்றுள்ளன. “இந்தத் தீர்ப்பு, அகதிகள் முகாமில் வசிக்கும் மக்களுக்கு நிச்சயம் ஆறுதலைத் தரும். அவர்களுக்கு ஏற்பட்டுள்ள தனிமை உணர்வையும், இயலாமையையும், மன விரக்தியையும் இத் தீர்ப்புப் போக்கும்” என்று தெரிவித்துள்ளார் சேவ் தார்ஃபர் கொயாலேஷன் என்ற அமைப்பைச் சேர்ந்த நீமாட் அகமதி.

“இந்தத் தீர்ப்பு ஜனாதிபதி பஷீரை உலக நாடுகளிடமிருந்து தனிமைப்படுத்தியுள்ளது” என்று மனித உரிமைகள் கண்காணிப்பகத்தின் இயக் குநரான ரிச்சேர்ட் டிக்கர் தெரிவித்துள்ளார். “தற்போது ஜனாதிபதி பஷீரின் நிலை பரி தாபகரமாக உள்ளது. அவர் தேடப்படும் குற்றவாளிகளின் பட்டியலில் உள்ளார்” என்றும் ரிச்சேர்ட் தெரிவித்துள்ளார்.

பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றத்தின் செயற் பாட்டின்கீழ் 108 நாடுகள் உள்ளன. இந்த நாடுகள் மட்டுமல்ல, அனைத்து நாடுகளும் ஜனாதிபதி பஷீரை நீதிக்கு முன் கொண்டுவந்து நிறுத்த உதவ வேண்டும் என்று நீதிபதிகள் வெளியிட்டுள்ள தீர்ப்பில் தெரிவித்துள்ளனர்.

சட்டப்பூர்வமாக பஷீரைக் கைது செய்ய சூடான் அரசு ஒத்துக்கொண்டுள்ளது. ஆனால், அது நடக்குமா என்பது சந்தேகமே. நீதிமன்றக் கட் டுப்பாட்டின்கீழ் சூடான் நாட்டின் காவல் துறையினரோ, ராணுவமோ இல்லை. சூடானில் உள்ள ஐக்கிய நாடுகளுக்கான அமைதிக் குழுவினருக்குப் போரின்போது குற்றச்செயற்களில்



ஈடுபட்டோர் மீது நடவடிக்கை எடுப்பதற்கான அதிகாரமும் இல்லை. மொத்தத்தின் ஜனாதி பதியைக் கைது செய்யும் உத்தரவில் ஜனாதிபதிதான் கையெழுத்துப் போட வேண்டும் என்பதே நிலை

"பஷீர் மீதான குற்றவியல் நடவடிக்கையை அரபு நாடுகள் விரும்பவில்லை. பஷீரைக் கைது செய்தால், அமைதிக்குப் பங்கம் ஏற்படும் என்ற வகையில், அரபு நாடுகள் எவையும் அந்தச் செயலைச் செய்ய முன்வரமாட்டா. அதனால், அருகிலுள்ள ஆபிரிக்க நட்பு நாட்டினர்தான் அவரைக் கைது செய் வதற்கான நடவடிக்கையில் ஈடுபட முடியும்" என தூதர் அப்டஹலீம் தெரிவித்துள்ளார். அதற்கும் எந்தவொரு ஆபிரிக்க நாடும் தயாராக இருப் பதாகவும் தெரியவில்லை.

'ஜனாதிபதி பஷீர் ஓர் இனத்தையே கூண்டோடு அழிக்க வேண்டும் என்று திட்டமிட்டு இக் குற்றச் செயல்களைச் செய்தார்' என்பது தொடர்பான வாதத்தில் இரு வேறு கருத்துகள் நிலவுகின்றன. ஓர் இனத்தை அழிக்கும் நடவடிக்கையில் ஜனாதிபதி ஈடுபட்டார் என்பதற்குப் போதிய ஆதாரங்கள் எதுவும் இல்லை என்று வாதிட்ட சட்டத் தரணிகளில் ஒருதரப்பினர் தெரிவித்துள்ளனர். ஓர் இனத்தையை அழிக்கத் திட்டமிட்டதாகக் கூறு வதுதான் இங்கு முக்கியப் பிரச்சினையாக மையம் கொண்டுள்ளது.

அதாவது, ஃபர், மஸாலிட், ஜாக்கவா ஆகிய 3 இன மக்களை அவர்கள் வசித்த பகுதியில் இருந்து வெளியேற்ற அரசு முனைப்புடன் செயற்பட்டது. இந் நடவடிக்கைகளின்போது ஏராளமானோர் கொல்லப்பட்டனர். ஆயுதமேந்திய தீவிரவாதிகள் முகாம்களில் தங்கியிருந்த பெண்களை மான பங்கப்படுத்துவது உட்பட பல்வேறு கீழ்த்தரமான செயற்களில் ஈடுபட்டுள்ளனர் என சட்டத்தரணி


ஒருவர் நீதிமன்றத்தில் வாதிட்டார்.

தற்போது பிறப்பிக்கப்பட்டுள்ள கைது வாராண்ட், மேலும் பிரச்சினையைச் சிக்கலாக்கியுள்ளது. இந்தத் தீர்ப்பு, இப் பகுதியில் மேலும் வன்முறை அதிகரிக்க வழிவகுக்கும். போர் நடவடிக்கைகள் தீவிரமாகும். இதனால், தெற்கு சூடான் பகுதியில் வசிக்கும் ஏராளமான பொதுமக்கள் பாதிக்கப்படுவார்கள் என்று ஐக்கிய நாடுகள் சபையின் பிரதிநிதிகள், ஆபிரிக்க ஒன்றியம், அரபு லீக் அமைப்புகள் மற்றும் மனித உரிமை ஆர்வலர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

இந்நிலையில், சமாதானமாகச் செல்ல முற்பட்டவர்கள்கூட தற்போது தமது எண்ணத்தை மாற்றிக் கொண்டுள்ளனர். த ஜஸ்டீஸ் அண்ட் ஈகுவாலிட்டி மூவ்மெண்ட் என்ற பெயரில் தார்ஃபரில் உள்ள ஒரு பிரிவினைவாத அமைப்பு தங்களது நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்வதாக கடந்த மாதம் கார்த்டோமில் ஏற்பட்ட ஓர் ஒப்பந்தத்தின்போது தெரிவித்தது. தற்போது அரசுடன் மேற்கொண்ட அந்த ஒப்பந்தத்தை நிராகரிப்பதாக கடந்த புதன்கிழமை அதே அமைப்பு தெரிவித்துள்ளது.

சில இடங்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாக வன்முறை நடந்து வருகிறது என்று ஐக்கிய நாடுகள் சபையின் அமைதிக் குழுவுக்கான பொதுச் செயலர் ஆலின் லீ ராய் தெரிவித்துள்ளார். ஐக்கிய நாடுகள் சபையின் அமைதிக் காக்கும் குழுவைத் தார்ஃபருக்கு அனுப்புவதற்கு இனியும் காலந்தாழ்த்தப் போவதில்லை என்றும் லீ ராய் கூறியிருக்கிறார். தற்போது 64 சதவிகித அளவுக்கு அமைதிக் காக்கும் நடவடிக்கைகளுக்கான வேலைகள் இங்கு மேற்கொள்ளப்படுகின்றன என்று தெரிவிக்கும் லீ ராய், அமைதிப் படையினருக்குப் போதிய பாதுகாப்பு அளிப்பதாக சூடான் அரசு மீண்டும் உறுதி கூற வேண்டும் என்றும் வலியுறுத்துகிறார்.

அங்கு நடைபெற்று வரும் சம்பவங்கள் அதிர்ச்சி அளிப்பதாக உள்ளன. "ஜனாதிபதி பஷீருக்கு எதிராகக் கருத்துக் கூறினாலோ, நீதிமன்றத் தீர்ப்புக்கு ஆதரவு தெரிவிப்பது தெரிந்தாலோ அந் நபருக்கு கடுமையான தண்டனை வழங்கப்படும்" என்று அறிவித்திருக்கிறார் சூடானின் புலனாய்வுத் துறைத் தலைவரான ஷாலா கோஷ்.

இந்நிலையில், சூடானின் செயற்படும் சுமார் 610 தொண்டு நிறுவனங்களின் உரிமத்தை அந்நாட்டு அரசு விலக்கிக் கொண்டுள்ளது. மேலும், சிலரின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தியுள்ளது என ஐக்கிய நாடுகள் சபையின் பொதுச் செயலரான பான்கீமூனின் செய்தித் தொடர்பாளர் மைக்கேல் மாண்டாஸ் தெரிவித்துள்ளார்.

"இத்தொண்டு நிறுவனங்கள் நீதிமன்றத்துடன் இணைந்து செயற்பட்டு, தேவையான விவரங்களை நீதிமன்றங்களுக்கு அளித்து, அதிகாரிகள் மீதான நடவடிக்கைக்குக் காரணமாக இருந்துள்ளன" என்ற சூடான் அரசின் குற்றச்சாட்டை இந்த நிறுவனங்கள் மறுத்துள்ளன.

இதற்கு முன் 2007ம் ஆண்டு, சூடான் நாட்டு அமைச்சர் மற்றும் தீவிரவாத அமைப்பின் முன்னாள் தலைவர் ஆகியோரைக் கைது செய்ய நீதிமன்றம் வாராண்ட் பிறப்பித்திருந்தது. ஆனால், அவர்கள் இருவரும் கைது செய்யப்படவில்லை. ஜனாதிபதி பஷீரைக் கைது செய்வதை ஒத்தி வைக்கலாம் என ஐக்கிய நாடுகள் சபையின் பாதுகாப்புக் கவுன்சில் எண்ணுகிறது. ஆனால், இதற்கு ஒருசாராரிடம் இருந்து எதிர்ப்புக் கிளம்பியுள்ளது.

சூடான் நாட்டைவிட்டு வெளியே எந்த நாட்டுக்குச் சென்றாலும் ஜனாதிபதி பஷீர் கைது செய்யப்படுவார் என்று ஐ.நா. சபை கூறியுள்ளது. இதனால், ஜனாதிபதி பஷீர் வெளிநாடுகளுக்குச் செல்வதை தவிர்க்க நேரிடும் நிலை ஏற்பட்டுள்ளது. இந்தப் பிரச்சினையில் ஐ.நா.வின் அடுத்தகட்ட நடவடிக்கை என்ன? சூடான் ஜனாதிபதி பஷீர் கைது செய்யப்படுவாரா? பிரச்சினை எப்படி முடியப் போகின்றது?





மத்திய கிழக்கில் அமைதியை ஏற்படுத்த அமெரிக்க ஜனாதிபதி பராக் ஒபாமா உண்மையிலேயே மத்தியஸ்தம் செய்ய வேண்டுமானால் அங்கு முதலில் செய்ய வேண்டிய காரியம் என்னவென்றால் அங்கு நடைபெறும் தீவிரவாதத்துக்கு முற்றுப்புள்ளி வைப்பதுதான். அண்மையில் காசா பகுதியில் நடந்த சண்டை, மத்திய கிழக்கில் அமைதியை ஏற்படுத்த அமெரிக்கா மத்தியஸ்தம் செய்வது கடினம் என்பதை உணர்த்தியது.

பயங்கரவாத அமைப்புகள் என முத்திரை குத்தி ஹமாஸ், ஹிஸ்புல்லா அமைப்புகளை அமெரிக்கா அழைத்துப் பேசாத காரணத்தால் காசா பகுதியில் மீண்டும் மோதல் உருவானது. அமெரிக்காவையும் அரபு நாடுகளையும் ராஜதந்திர ரீதியில் பிரிப்பதாக இந்தத் தீவிரவாத அமைப்புகளின் செயற்பாடுகள் அமைந்திருந்தன. இதனால், பிணக்கு வளர்ந்த தேயொழிய குறையவில்லை என்பதுதான் போராடுகின்றன எனவும் பொதுமக்கள் கருது கின்றனர். ஹமாஸ் அமைப்பு இஸ்ரேலியக் குடியிருப்புப் பகுதி மீது ரொக்கெட் தாக்குதல் நடாத்துவதற்கும் இஸ்ரேல் ரொக்கெட் மூலம் காசா பகுதியில் உள்ள குடியிருப்புகள் மீது தாக்குவதிலும் தாங்கள் எந்தவித வித்தியாசத்தையும் காணவில்லை என காசாவில் வசிக்கும் பெரும்பாலானவர்கள் கருதுகின்றனர்.

போரில் ஹமாஸ் இயக்கத்தின்மீது தாக்குதல் நடத்துவதாகக் கூறிக்கொண்டு அப்பாவி மக்களை இஸ்ரேல் தாக்குகிறது என காசாவில் வசிக்கும் பெரும்பாலானவர்கள் வருத்தத்துடன் கூறுகின்றனர்.

ஆனால், இஸ்ரேல் கூறுவது வேறுவிதமாக உள்ளது. "ஹமாஸ் அமைப்பு வேண்டுமென்றே அப்பாவிகளை மனிதக் கேடயமாக வைத்து பின்னால் நின்று சண்டையிடுகின்றனர். அப்படியிருந்தும் நாங்கள் (இஸ்ரேலிய ராணுவம்) எங்களை எதிர்க்கும்,

# ஆயுதங்களுடன் வரும் இயக்க உறுப்பினரை உயிர் போகாமல் சுடுவது எப்படி?

இன்றுவரை நிலைமை.

2001ல் ஜோர்ஜ் புஷ் பயங்கரவாதத்திற்கு எதிரான போரைத் தொடங்கினார். ஆனால், காசா பகுதியில் தீவிரவாதச் செயல்களுக்கு அவரால் முற்றுப்புள்ளி வைக்க முடியவில்லை. காசா பகுதியில் நடந்து வரும் சண்டை ஒரு வகைப் பயங்கரவாதம்தான் எனப் பொதுக்கருத்துகள் வெளியாகின.

ஆனால், ஒருபுறம் அப்படிக் கூறினாலும் மறுபுறம் ஹமாஸ், ஹிஸ்புல்லா ஆகிய அமைப்புகள் தங்கள் நாட்டுக்கு விடுதலை பெற்றுத்தரப்



தீவிரவாதிகளை அடக்கிவைக்கும் விதமாக தற்காப்பு யுத்தம்தான் நடாத்துகின்றோம். வேண்டுமென்றே மக்கள்மீது தாக்குதல் நடாத்தவில்லை" என இஸ்ரேலிய ராணுவம் கூறுகிறது. இது ஐ.நா.வுக்கான இஸ்ரேலியத் தூதராக முன்பு பதவி வகித்த டோர் கோல்ட் என்பவரது கருத்து. எந்தப் போரிலும் அப்பாவி மக்கள் தாக்கப்படுவது இயல்புதான் எனவும் அவர் கூறினார்.

இந்தக் கருத்தை காசாவில் வசிக்கும் யாரும் ஏற்றுக் கொள்ளவில்லை.

ஹமாஸ் இயக்கத்தைப் பயங்கரவாத அமைப்பு என அமெரிக்கா கருதுகிறது. ஆனால், கிட்டத்தட்ட அதே காரியத்தைச் செய்யும் இஸ்ரேலை அது நெருங்கிய நட்பு நாடாகக் கருதுகிறது என்பது காசாவிலுள்ள பலரது ஆதங்கம்.

"அமெரிக்கா ஆதரிக்கும் நாடு தாக்கினால் அது தப்பில்லை என்பது அமெரிக்கா பின்பற்றும் கொள்கையாக உள்ளது என்பது நியதியாகிவிட்டது. லெபனானிலிருந்து 20 ஆண்டுகால இஸ்ரேலிய ஆக்கிரமிப்பை அகற்றிக்கொள்ள வேண்டும் என ஹிஸ்புல்லா அமைப்புக் கூறியது அமெரிக்காவுக்கு கசப்பான விஷயமாகப் படுகிறது. இந்த அமைப்புகளையெல்லாம் பயங்கரவாத அமைப்புகள் என ஒபாமா கருதினால் இந்தப் பிராந்தியத்தில் அமைதி திரும்பச் செய்வது கடினம்" என்கிறார் காசாவிலுள்ள மாதி நகரின் புறநகரில் பூ விற்கும் ஹானி ஹசன்.

"எது பயங்கரவாதம்; எது பயங்கரவாதமல்ல என்பது எங்களுக்கு நன்கு தெரியும். இதை அமெரிக்கா சொல்வதைக் கேட்டு நாங்கள் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியமில்லை" என்றும் கூறுகிறார் அவர்.

"ஈரான் ஆக்கிரமிப்பில் இறங்கினால் அது குற்றமாகக் கருதப்படுகிறது. இப்படிப்பட்ட பிரச்சினைகளால்தான் இப்பிராந்தியத்தில் அடிக்கடி பிரச்சினை வருகிறது.

சமீபத்தில் ஈரானைச் சேர்ந்த முஜாகிதீன் அமைப்பைத் தடை செய்யப்பட்ட பயங்கரவாத அமைப்புகள் பட்டியலிலிருந்து நீக்கியதால் ஐரோப்பிய யூனியனுக்கான தனது தூதர்களை ஈரான் திரும்பப் பெற்றது. ஐரோப்பிய யூனியன் இது விஷயத்தில் முரண்பாடாக, பச்சோந்தி போல நடந்துகொள்வதை ஈரான் வன்மையாகக் கண்டித்தது" என ஈரானிய வெளியுறவுத்துறை அமைச்சர் கூறுகிறார்.

"ஹமாஸ், ஹிஸ்புல்லா ஆகியன பயங்கரவாத அமைப்புகள்தான். ஆனால், அவற்றுடன் பேச்சு நடாத்தி அமைதியை உருவாக்கிட வேண்டும் என சில நாடுகள் கூறுகின்றன. இதை எப்படி ஏற்றுக்கொள்வது?" என்கிறார் இஸ்ரேலைச் சேர்ந்த அமெரிக்காவின் பெரஸ் சென்டர் என்ற அமைப்பின் இயக்குநர் ரோன் புன்டேக்.

"பதே பிரிவுத் தலைவர் மற்றும் அந்த அமைப்பை அமைதி அமைப்பாக அமெரிக்காவும் இஸ்ரேலும்



இப்போது அங்கீகரிக்கின்றன. ஆனால், ஒரு காலத்தில் இந்த அமைப்பின் தலைவரை பயங்கரவாதியாகத்தான் பார்த்தார்கள். முஸ்லிம்கள் என்றாலே பயங்கரவாதிகள் என்றுதான் அமெரிக்காவும் இஸ்ரேலும் கருதுகின்றன" என்கிறார் காவிசிட்டியில் கடந்த வாரம் செல்போன் விற்றுக் கொண்டிருந்த இமாத் ஜலால். "முஸ்லிம் அல்லாதவர்களை அவ்வளவு எளிதாகப் பயங்கரவாதிகள் எனக் கூறமாட்டார்கள்"

"அரபு நாட்டவருக்கு அமெரிக்கர்கள் எதிரியல்ல என உணர்த்துவதற்காக அமெரிக்க ஜனாதிபதி ஒபாமா முயற்சிக்கிறார். அவருக்கு இந்த விஷயத்தில் நீங்கள் கூறும் யோசனை என்னவாக இருக்கும்" என்று கய்ரோவில் (எகிப்து) கடைவீதியில் பொருட்கள் வாங்கிக் கொண்டிருந்த வாஃபா யூனிஸ் என்ற பெண்ணிடம் அல் ஜசீரா தொலைக்காட்சி கேட்டபோது "அவர் எல்லோரது கருத்துக்கும் கோரிக்கைகளுக்கும் மதிப்பளித்து அவற்றை முதலில் காதில் போட்டுக்கொண்டு பிரச்சினையைச் சரியாகப் புரிந்து கொள்ளட்டும். அதன் பிறகு ஆலோசனை கூறலாம்" என்றார் வெறுப்புடன்.

"எகிப்தில் உள்ள அமெரிக்கப் படையினர் சொகுசாக வாழ்கின்றனர். 18 ஏக்கரில் ராணுவ வளாகத்தை சகல வசதிகளுடன் கட்டி அதில் உண்டு, உறங்கி காலம் கடத்துகின்றனர். ஒபாமா அரசு மத்திய கிழக்கு நாடுகளைத் தனது ராணுவத்தின் பிடியில் வைத்திருக்க நினைக்கிறது" என்றும் கூறுகிறார் வாஃபா யூனிஸ்.

"கடந்த மாதத்தில் ஜோர்ஜ் ஜெனரல் மிட்சல் டாயன் என்பவர் அமெரிக்கப் படைக்குக் கடமையாற்ற 3 ஆண்டுகால ஒப்பந்தத்தில் எகிப்துக்கு வந்தார். இப்போது மேலும் 2 ஆண்டு இருக்கும்படி கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறார். அப்படியானால் இந்தப் பிராந்தியத்தில் பிரச்சினை வரைவில் முடியும் என்று அமெரிக்கா நினைக்கவில்லை என்றே தெரிகின்றது" என்று கூறுகிறார் எகிப்தில் அமெரிக்க ராணுவத்தில் உயர் அதிகாரிகளைப் பாதுகாக்கும் சிறப்புப் பிரிவில் 1000 வீரர்களுக்குத் தளபதியாக உள்ள பிரிகேடியர் ஜெனரல் முனீர் அல் ஜுபி.

"எகிப்தில் சட்டம் ஒழுங்கை நிலைநாட்டவே அமெரிக்க ராணுவம் வந்துள்ளது. அமெரிக்க ராணுவத்தின் உதவியுடன் பயங்கரவாதத்தை நாங்கள் ஒழிப்போம். இரண்டு ஆண்டுக்குள் பயங்கரவாதம் என்ற சொல்லைக்கூட நாங்கள் சொன்னதில்லை. ஆனால், இப்போது நிலைமை தலைமை கீழாக மாறிவிட்டது. காசா பகுதியில்



ஆக்கிரமிப்புக்கு எதிரான செயல் என்ற பெயரில் இங்கே எகிப்தில் பலர் பயங்கரவாதச் செயலில் ஈடுபடுகின்றனர் என்பதை நாங்கள் கண்டுபிடித்துள்ளோம். அதை நாங்கள் ஒடுக்குவோம்" என்கிறார் அவர்.

"காசா பகுதியில் ஹமாஸ் ஆட்சிப் பொறுப்பு ஏற்றதுதான் கடந்த 2 ஆண்டுகளில் ஏற்பட்ட மாற்றம். காசா பகுதியில் மேற்குக் கரையை ஒரு மொடல் நகரமாக்க மாற்ற பாலஸ்தீன தலைமை விரும்புகிறது" என்றார் முனீர் அல் சௌபி. அவர் மேலும் கூறுகையில், மனித உரிமைகள் பற்றியும் தனது படைப்பிரிவுக்குக் கற்றுத்தரப்பட்டுள்ளது என்றார் சந்தேகத்துடன். ஆயுதங்களுடன் வரும் தீவிரவாத இயக்க உறுப்பினரை எப்படி உயிர் போகாமல் சுடுவது எனவும் பயிற்சி தந்துள்ளதாக அவர் தெரிவித்தார்.

"காசாவில் பாலஸ்தீனியர்களுக்குப் பயிற்சி அளிப்பது நன்மையளிக்கும்" என எகிப்திலுள்ள அமெரிக்க ராணுவ அதிகாரிகள் கூறுகிறார்கள். "ஏனெனில், மேற்குக் கரையில் அவர்களால்தான் அமைதியை நிலைநிறுத்த முடியும்"

ஆனால் இஸ்ரேலிய ராணுவ அதிகாரிகளோ



"மேற்குக்கரையில் இஸ்ரேலியப் படைகள் இரவு ரோந்து செல்லாவிடில் அங்கு ஹமாஸ் அமைப்பின் தொல்லை தாங்கமுடியாத அளவில் இருக்கும்" என கூறுகின்றனர்.

எகிப்திலிருந்து லெபனானுக்குள் சென்று அங்குள்ள பாலஸ்தீனியர்களுக்குப் பயிற்சி அளிப்பதும், பின்னர் அவர்களை காசாப் பகுதிக்குள் பாதுகாப்புக் கடமையில் இறக்கி மேற்பார்வையிடவும் அமெரிக்க ராணுவம் விரும்புகின்றது. ஆனால் இந்தத் திட்டத்தை இஸ்ரேலிடம் தெரிவித்தபோது அமெரிக்கப் படையினருக்கான கவச உடைகளையும் சீருடைகளையும் காசாப் பகுதிக்குள் கொண்டு செல்லக்கூட இஸ்ரேலியர்கள் அனுமதி கொடுக்கவில்லை.

காசா பகுதியில் இன்னமும் பதற்றம் இருந்து கொண்டுதான் உள்ளது. பாலஸ்தீனிய ராணுவ அதிகாரிகள், இஸ்ரேலிய ராணுவ அதிகாரிகள் ஆகியோரிடையே தினமும் பேசிடக்கூடிய ஒரு சில அமெரிக்க ராணுவ உயரதிகாரிகளில் டாயனும் ஒருவர். பதற்றம் பற்றி அவர் பொது நபர்போல விவரம் தெரிவிக்கிறார். ஆனால், பாலஸ்தீனியப் படையினருக்குப் பயிற்சி அளிப்பதில் பயனுண்டு என அவர் திடமாக நம்புகிறார்.

மேற்குக் கரையில் உள்ள 8 நகரங்களிலும் வலுவான பாலஸ்தீன ராணுவப்படைப் பிரிவைப் பாதுகாப்புக்கு நிறுத்துவதில் அவர் உறுதியாக இருக்கிறார். தான் 2003ம் ஆண்டு ஈராக்கில் ராணுவப் பதுக்கல்களைக் கண்டுபிடிக்க நியமிக்கப்பட்டபோதே இந்தப் பிராந்தியப் பிரச்சினைகளை அறிந்துவைத்ததாகவும் அவர் கூறினார்.

"நான் ஈராக்கியப் படைவீரர் ஓய்வு வளாகத்தில் இஸ்ரேலியரால் சிதைக்கப்பட்ட ஒரு மசூதியின் படத்தைப் பார்த்தேன். நிச்சயமாக இஸ்ரேலும் சில விரும்பத்தகாத வேலைகளை இந்தப் பிராந்தியத்தில் செய்திருக்கின்றது. தீவிரவாதிகளை அழிப்பது மாத்திரமே குறி என்றால் எதற்காக மசூதியைச் சிதைக்க வேண்டும்?

நான் தேசியப் பாதுகாப்புப் படை முகாமில் பாலஸ்தீனிய ராணுவ அதிகாரி ஷாங்கி அல் ஷபாடி என்பவரைச் சந்தித்துப் பேசினேன். ஷாபி 1968ம் ஆண்டு முதல் பாலஸ்தீனப் படையில் கடமையாற்றுகிறார். எல்லோரும் அமைதி திரும்புவதையே விரும்புகின்றனர் என ஷபாபி அப்போது கூறினார். இந்தத் தலைமுறையினர் நிம்மதியற்ற வகையில் வாழ்கின்றனர். எனவே, அவர்களுக்கு அமைதியான வாழ்வு தேவை.

பாலஸ்தீனியர்கள் இஸ்ரேலியர்களுடன் சேர்ந்து ஒரே நாட்டவராக வாழ விரும்புகின்றனர். ஆனால், யூதர்கள்தான் அவர்களுக்கென தனி நாடு வேண்டும் என விரும்புகின்றனர். நாங்களும் அதை ஏற்கிறோம். ஆனால், உலகில் வேறு எங்கும் நிலவாத அளவுக்கு அமைதி பாலஸ்தீனத்தில் நிலவ வேண்டும் என பாலஸ்தீனியர்கள் விரும்புகின்றனர்" என்றார் அமெரிக்க ராணுவ உயரதிகாரிகளில் டாயன். நிச்சயமாக அது அவரது சொந்தக் கருத்து. அமெரிக்காவின் கருத்தல்ல!






லங்கை கிரிக்கெட் அணி பாகிஸ்தானில் தாக்கப்பட்ட சம்பவம் சாதாரணமான ஒரு தீவிரவாத நடவடிக்கை அல்ல; அதன் பின்னணியில் வெளிச்சக்திகள், அரசியல் குழிபறிப்பு என்று பலதும் பத்தும் இருக்கின்றன என்ற விபரங்கள் தற்போதுதான் மெதுமெதுவாக வெளியாகத் தொடங்குகின்றன. இலங்கையில் நடைபெறும் யுத்தத்துக்கும் இந்தத் தாக்குதலுக்கும் இடையிலுள்ள சம்மந்தமும் அதிர வைக்கிறது..

கிரிக்கெட் வீரர்களுக்குப் பாதுகாப்பாகச் சென்ற ஆறு பொலிஸ் அதிகாரிகளைக் கொன்றுவிட்டு சமயோசிதமாக தப்பிச்சென்ற அந்த 12 தீவிரவாதிகளும் துப்பாக்கியால் சுடுவதில் நன்கு பயிற்சி பெற்றவர்கள் என்றும், அவர்கள் கிரிக்கெட் வீரர்களை பணயக் கைதிகளாகக் கடத்திச் செல்ல திட்டமிட்டிருந்தனர் என்றும், கிரிக்கெட் வீரர்களைக் கொல்வது மாத்திரமே அவர்கள் நோக்கமல்ல என்றும் சில உயர்மட்டத் தகவல்கள் கூறுகின்றன.

இலங்கையின் கிரிக்கெட் அணியில் சிலரைப் பணயக் கைதிகளாகப் பிடித்துச்சென்று என்ன செய்யலாம்? தற்போது இலங்கையில் விடுதலைப் புலிகளுக்கு எதிரான யுத்தத்தை நடத்திக் கொண்டிருக்கும் இலங்கை அரசுக்கு ஆயுத உதவிகளைச் செய்துகொண்டிருக்கும் பாகிஸ்தானுக்கும் இலங்கைக்கும் முதலில் பகையை ஏற்படுத்த முடியும்.

அல்–காய்தாவுடன் கூட்டணி வைத்துக்கொண்டு, வடக்கு வசிரிஸ்தான் பழங்குடியினப் பகுதியில் உள்ள பஞ்சாபி மற்றும் காஷ்மீரி தலைவர்களின் கீழ் செயற்படும் இயக்கம்தான் இந்தத் தாக்குதலின் பின்னணியில் உள்ளது என்பதுதான் இந்தியாவின் (நேரடியாகச் சொல்லாவிட்டாலும்) நிலைப்பாடு.

சிறையில் வாடும் தங்களது சக தீவிரவாத நண்பர்களை விடுதலை செய்ய வேண்டும் என்ற கோரிக்கையை நிறைவேற்றுவதற்காகவும், வடக்கு வசிரிஸ்தானுக்கு அவர்களைப் பத்திரமாகக் கொண்டு செல்லவுமே கிரிக்கெட் வீரர்களைப் பணயக் கைதிகளாகப் பிடிக்கும் இந்த சதித் திட்டம் மேற்கொள்ளப்பட்டுள்ளது என்பதே இந்தியா தனது நிலைப்பாட்டுக்குக் கூறும் காரணம்.

இலங்கை என்ன சொல்கிறது?

இஸ்லாமாபாத்திலுள்ள இலங்கைத் தூதரக அதிகாரி, “இலங்கை கிரிக்கெட் வீரர்களைக் கொல்ல வேண்டும் என்ற நோக்கத்தில் இந்தத் தாக்குதல் நடாத்தவில்லை என்று தெரிகிறது. தீவிரவாதிகளின் தாக்குதல் அனைத்தும், இலங்கை வீரர்களைப் பாதுகாக்கும் பொலிஸ் அதிகாரிகளை நோக்கியே குறி வைத்துத் தாக்கியுள்ளது. இலங்கை கிரிக்கெட் வீரர்களைப் பணயக் கைதிகளாகக் கடத்திச் செல்லும் தீவிரவாதிகளின் திட்டத்தை பஞ்சாப் பொலிசாருடன் வந்த சிறப்பு கொமாண்டோ படையினர் தந்திரமாகக் கையாண்டு தடுத்தனர். அவர்கள் மைதானத்தைச் சுற்றி நின்று துப்பாக்கியால் சுட்டு தக்க பதிலடி கொடுத்தனர்” என்றார். இதிலும் இந்தியாவின் ‘பணயக் கைதிகள்’ பகுதி வருகின்றது. ஆனால் தீவிரவாத அமைப்பு எது என்பது குறிப்பிடப்படவில்லை.

மைதானத்தின் அருகே தாக்குதல் நடந்த பகுதியிலிருந்து பறிமுதல் செய்யப்பட்ட பொருட்கள் விபரம் வருமாறு: ஏகே–47 துப்பாக்கிகளுடன் ஒரு பெரிய பை, இலகு ரக யந்திரத் துப்பாக்கி, கையெறி குண்டுகள், ரொக்கெட் லோஞ்சர், பிளாஸ்டிக் வெடி குண்டுகள், வயர்லெஸ் செட்கள்.

பஞ்சாப் பொலிஸ் ஐ.ஜி. காவாஜா காலித் பரூக், “நீண்ட நேரம் தாக்குதல் நடாத்துவதற்கு ஏற்ற வகையில் தகுந்த ஆயுதங்களுடன் தீவிரவாதிகள் வந்துள்ளனர். தேவையான அளவுக்குக் குடிநீர், பாண் ஆகிய உணவுப் பொருட்களையும் வைத்திருந்தனர். சம்பவம் பற்றிய வீடியோ தொகுப்பு மூலம் மேலும் பல தகவல்கள் தெரியவந்துள்ளன. அந்த ஒளிப்பதிவுகளில் இருந்து தெரியவந்த விபரங்களில் இருந்து, துப்பாக்கி ஏந்திய தீவிரவாதிகள், நாகரிகமாக ஆடைகளுடன், ஓடுவதற்கு ஏற்ற காலணிகளும் அணிந்திருந்தனர்” என்று தெரிவித்திருந்தார்.

அந்தத் தீவிரவாதிகள் நல்ல திடகாத்திரமான உடற்கட்டுடனும் காணப்பட்டனர். மலைப்பகுதியில் வாழும் பழங்குடியினத்தவர் போல நீண்ட பிஜாமா போன்ற ஆடைகளும், தலையில் டேர்பனும், சாண்டல் செருப்பும் அணியவில்லை. சுருக்கமாகச் சொன்னால் பாகிஸ்தானில் தாக்குதல் நடாத்தும் தீவிரவாத அமைப்பினரின் தோற்றத்துக்கும், இவர்களுக்கும் வெளித்தோற்றத்தில் எந்தவிதச் சம்மந்தமும் இல்லை.

இதுவரை நடாத்தப்பட்ட விசாரணைகளின் போக்கு, தாக்குதலில் ஈடுபட்ட தீவிரவாதிகள் அனைவரும் தடை செய்யப்பட்ட லஷ்கர்–இ–தொய்பா இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் என்ற கோணத்தில் செல்கிறது. இந்த இயக்கம் காஷ்மீரில் நீண்ட காலமாகப் போராட்டத்தை நடாத்தி வருகிறது. காஷ்மீரில் செயற்படும் இந்தத் தீவிரவாதிகள் அனைவரும் பாஸ்தூன்கள் அல்லாதவர்களே. அவர்களில் பெரும்பாலானோர் மத ஆர்வம் மிகுந்த பஞ்சாபியர்கள். அவர்களது இலக்குகள் எப்போதும் இந்தியாவிலேயே இருந்திருக்கின்றனவே தவிர, பாகிஸ்தானில் அல்ல.

இதனால் லஷ்கர்–இ–தொய்பா அமைப்பை இந்தத் தாக்குதலுக்குள் இழுப்பது, இந்தியா தனது விரோதியை இலங்கைக்கும் ஒரு பொது விரோதியாக்கும் உத்தியாகவே இருக்கலாம். அத்துடன் லஷ்கர்–இ–தொய்பா அமைப்பும் இலங்கை கிரிக்கெட் அணி மீதான தாக்குதலுக்கும் தங்களுக்கும் சம்மந்தமில்லை என்று அறிவித் திருக்கின்றது.

லாகூரில் இலங்கை கிரிக்கெட் அணி மீதான



தாக்குதலில் லஷ்கர் இ தொய்பா இயக்கம் சம்பந்தப்பட்டிருப்பதாக வெளியாகியுள்ள ஊடக அறிக்கைகளை அந்த அமைப்பின் பேச்சாளர் அப்துல்லா ஹாஸ்நவி மறுத்துள்ளார். ஸ்ரீநகரில் இனங்காணப்படாத இடமொன்றில் இருந்து தொலைபேசியில் பேசிய அவர், இந்த ஊடக செய்திகள் பிழையானவை, ஆதாரமற்றவை என்று கூறியிருப்பதாக ஏ.எஃவ்.பி. செய்திகள் தெரிவித்தன.

"இலங்கைக் குழுவினர் மீதான தாக்குதல் பாகிஸ்தானின் இறைமைமீது இடம்பெற்ற தாக்குதலாகும். அந்த மாதிரியானதொன்றை காஷ்மீர் போராளிகள் நினைத்துக்கூட பார்க்க மாட்டார்கள்" என்று ஹாஸ்நவி கூறியுள்ளார். "பாகிஸ்தானின் புகழை மாசுபடுத்தவும் அந்த நாட்டில் ஸ்திரத்தன்மையின்மையை ஏற்படுத்தவும் இந்திய உளவு நிறுவனங்கள் மேற்கொண்ட வேலையே லாகூரில் இலங்கை கிரிக்கெட் அணிமீது நடாத்தப்பட்ட தாக்குதல் என்று அப்துல்லா ஹாஸ்நவி தெரிவித்துள்ளார். (இப்படியான விஷயங்களில் தீவிரவாத அமைப்புகளின் அறிவிப்புகளைப் பெரிதாக எடுக்க வேண்டியதில்லை என்ற வாதத்திலும் ஓரளவு நியாயம் இருப்பது உண்மைதான்)

பாகிஸ்தானின் உளவு அமைப்பான ஐ.எஸ்.ஐ. தான் இந்தத் தீவிரவாத அமைப்புக்குத் தகுந்த பயிற்சி அளித்துள்ளது என்று கடந்த காலங்களில் இந்தியா குற்றம்சாட்டி வந்துள்ளது. இந்தியாவின் கட்டுப்பாட்டிலுள்ள காஷ்மீரில், இந்தியப் பாதுகாப்பு அதிகாரிகளுக்கு எதிராக இந்த அமைப்பினர் செயற்படுவதுண்டு. ஆனால் தமக்குப் பயிற்சியும் ஆயுதமும் புகலிடமும் கொடுத்த பாகிஸ்தானுக்கு உலக அளவில் சங்கடம் ஏற்படும் வகையில், பாகிஸ்தான் மண்ணில் வைத்தே, இப்படியொரு தாக்குதலை அந்தத் தீவிரவாத அமைப்பு நடாத்தியிருக்குமா? சந்தேகம்தான்.

பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ. உளவு அமைப்பினர் கடந்த சில ஆண்டுகளாகவே தங்களது செயற்பாடுகளை இந்தியக் காஷ்மீரில் நிறுத்தி வைத்துள்ளனர். ஐ.எஸ்.ஐ.யால் முன்பு பயிற்சி கொடுக்கப்பட்ட பல தீவிரவாதிகளும் தலிபான்களுடன் கூட்டாக இணைந்து ஆப்கானிஸ்தானில் வன்முறையில் ஈடுபட்டுள்ளனர். பொதுவாகவே பாகிஸ்தான் அரசுக்கு அவர்கள் இடைஞ்சல் கொடுப்பதில்லை.

லாகூரில் நடாத்தப்பட்ட தாக்குதல், இதற்கு முன்பு இந்தியாவில் மும்பையில் நடாத்தப்பட்ட தீவிரவாதிகளின் தாக்குதல் போல உள்ளது என்கிறது இந்தியா. மும்பையில் நடாத்தப்பட்ட தாக்குதல் ஐ.எஸ்.ஐ.யின் அனுசரணையுடன் நடாத்தப்பட்ட

தாக்குதல் என்றும் இந்தியா கூறியிருக்கும் நிலையில், பாகிஸ்தானின் உளவுப்பிரிவே தமது நாட்டுக்குள் நடாத்தப்பட்ட இந்தத் தாக்குதலுக்கும் உடந்தையாக இருந்ததா? லொஜிக் உதைக்கிறதே!

கடந்த செவ்வாய்க்கிழமை நடந்த தாக்குதலுக்கும், ஸ்வாட் பள்ளத்தாக்கில் மேற்கொள்ளப்பட்ட போர் நிறுத்த ஒப்பந்தத்திற்கும் நேரடித் தொடர்பு உண்டு என்பதையே இந்தியா எஸ்டாபிளிஷ் பண்ண முயலும் என்று எதிர்பார்க்கலாம். அதை எப்படி யென்று கூறுகின்றோம். அதையும் பாருங்கள்.



பல ஆண்டுகளாக தீவிரவாதிகளுடன் நடந்த போருக்குப் பிறகு, பாகிஸ்தான் அரசு அவர்களுடன் போர் நிறுத்தம் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளது. இதன் மூலம் ஸ்வாட் பள்ளத்தாக்கில் இஸ்லாமிய ஷாரியா சட்டத்தை அமல்படுத்தவும் அனுமதி அளிக்கிறது. (இதுபற்றிய விரிவான தனிக் கட்டுரை 57ம் பக்கத்தில் பிரசுரமாகியிருக்கின்றது) ஸ்வாட் ஒப்பந்தம் கையெழுத்து ஆவதற்கு முன், பாகிஸ்தான் தலிபான்கள் தங்களது கோரிக்கைகளை அரசிடம் கொடுத்தனர். இந்தக் கோரிக்கைகள்தான் இந்தியக் கோணத்தின் துருப்புச்சீட்டு.



இந்தக் கோரிக்கைகளின்போது, பாகிஸ்தான் பாது காப்பு படையின் தாக்குதல்களில் உறவினர்களையும், சொத்துகளையும் இழந்தவர்களுக்கு இழப்பீடாக 480 மில்லியன் டொலர் வழங்க வேண்டும் என்று கோரிக்கை விடுத்தனர். அத்தோடு, சிறையில் அடைக்கப்பட்டுள்ள தலிபான் தீவிரவாதிகளையும் விடுதலை செய்ய வேண்டும் என்றும் கேட்டனர்.



தலிபான்களின் மற்ற கோரிக்கைகள் அனைத்தையும் பாகிஸ்தான் அரசு ஏற்றுக் கொண்டது. ஆனால், சிறையில் உள்ள தீவிரவாதிகளை விடுதலை செய்ய முடியாது என்று மறுத்துவிட்டது. அவர்கள் ஸ்வாட் பள்ளத்தாக்கைச் சேர்ந்தவர்கள் அல்ல என்று பாகிஸ்தான் அரசு கூறிவிட்டது.

விடுவிக்கப்படவேண்டும் என்று கோரிக்கை விடப்பட்ட இந்தத் தீவிரவாதிகள் பட்டியலில் முதலில் இடம்பிடித்துள்ளவர் மௌலானா அப்துல் அஜிஸ். இஸ்லாமாபாத் லால் மஜீத் மத குருவான இவர், 2007ம் ஆண்டு ஜூலை மாதம் மசூதி மீது பாதுகாப்புப் படைகள் தாக்குதல் நடாத்தியபோது அங்கிருந்து தப்பிச் செல்ல முயன்று அது முடியாமல் கைது செய்யப்பட்டவர். இவரைப் போலவே மேலும் சிலரை சிறையிலிருந்து விடுவிக்க அரசு மறுத்துவிட்டது.



இவர்களை விடுதலை செய்வதற்கே இலங்கை கிரிக்கட் அணியில் சிலரை பணயக் கைதிகளாகப்

பிடித்துச்சென்று வைத்திருந்து, பாகிஸ்தான் அரசை மிரட்டிக் கைதிகளை விடுவிக்க நினைத்திருக்கலாம் என்ற கோணத்திலும் ஒரு கதை சொல்லப்படலாம்.

இருந்து பாருங்கள், மேலே கூறப்பட்ட கதைதான் இந்தியத் தரப்பிலிருந்து கூறப்படும்.

ஆனால் அதிலும் பல ஓட்டைகள் இருக்கின்றன. முதலாவது, இங்கு விடுவிக்குமாறு கோரப்படும் தீவிரவாதிகள் தலிபான் அமைப்பின் ஆட்கள். லஷ்கர்–இ–தொய்பா அமைப்பின் ஆட்கள் அல்ல. அப்படியிருந்தும் தலிபான்களை விடுவிக்க லஷ்கர்–இ–தொய்பா எதற்காக இவ்வளவு பெரிய ரிஸ்க் ஒன்றை எடுத்துக்கொள்ள வேண்டும்?

இரண்டாவதாக, ஒருவேளை அப்படித்தான் அந்த இயக்கம் செய்ய முயன்றாலும், அதற்காக உலக அரங்கில் எந்தவித பலமுமற்ற இலங்கையின் கிரிக்கெட் குழுவையா கடத்த முயல்வார்கள்? இங்கிலாந்து போன்ற பெரிய நாடு ஒன்றின் கிரிக்கெட் குழுவைக் கடத்தியிருந்தால், கடத்திய அமைப்பினரின் கோரிக்கைகள் நிறைவேற்றப்பட அந்த நாடுகளும் சேர்ந்து அழுத்தம் கொடுக்குமே.. பாகிஸ்தானுக்கு விளையாடச்செல்லும் கிரிக்கெட் அணிகள் என்று பார்க்கும்போது, எல்லா நாட்டுக் கிரிக்கெட் அணிகளுக்கும் கிட்டத்தட்ட ஒரேயளவு பாதுகாப்பே கொடுக்கப்படுகின்றது.

இந்தத் தாக்குதல் வீடியோ கமராவில் பதிவானதால், தீவிரவாதிகள் யார் என்றும், அவர்கள் எந்த அமைப்பைச் சேர்ந்தவர்கள் என்றும் அடையாளம் காண பாகிஸ்தான் அதிகாரிகளுக்கு வழி கிடைத் துள்ளது. ஆனால், அதைவைத்து பாகிஸ்தான் புலனாய்வு அமைப்புக்கள் எவ்வளவு துல்லியமாகக் கண்டுபிடிக்கும் என்பதில் பலத்த சந்தேகம் இருக்கிறது. தாக்குதல் எதற்காக நடாத்தப்பட்டது, இதற்கு யார் பொறுப்பு என்பதை இப்போது அடித்துக் கூறிவிட இயலாது என்றாலும், இது நிச்சயமாக ஒரு பணயக்கைதி விளையாட்டல்ல என்பதைக் கூறிவிடலாம்.

அனேகமாக இதில் இந்திய உளவுத்துறை றோவுக்கு சம்மந்தம் இருக்கலாம் என்றே நம்ப இடமிருக்கிறது. அப்படியொரு சம்மந்தம் கிடையவே கிடையாது என்று இந்தியா மறுக்கும் என்பதும் நிச்சயம்.

இலங்கைக் கிரிக்கெட் அணிமீது பாகிஸ்தானில் வைத்து நடாத்தப்பட்ட தாக்குதலில் யாருக்கு எவ்வளவு இழப்பு இருக்கிறதோ இல்லையோ, இந்தியாவுக்குப் பலன் இருக்கின்றது. இதை வைத்து இலங்கைப் பிரச்சினைக்குள் ஏற்கனவே மைதா னத்துக்குள் இருக்கும் மற்றொரு ஆட்டக்காரரான பாகிஸ்தானை ரன்–அவுட் ஆக்குவது சுலபம் என்பதே அந்தப் பலன்.

இலங்கை கிரிக்கெட் அணி மீது கடந்த வாரம் நடாத்தப்பட்ட தாக்குதலில் 'வெளிநாட்டுச் சக்தி'க்குப் பங்கிருப்பதாக நம்புகிறேன் என்று முன்னாள் பாகிஸ்தான் கிரிக்கெட் அணி காப்டன் இம்ரான் கான் சனிக்கிழமை வெளியான பேட்டி ஒன்றில் தெரிவித்துள்ளார். "இந்தியா, ஆப்கா னிஸ்தான், விடுதலைப்புலிகள் என அந்தச் சக்தி யாராக வேண்டுமானாலும் இருக்கலாம்'' என்று கான் கூறியதாக த டைம்ஸ் ஒஃப் லண்டன் வெளியிட்டுள்ள பேட்டியில் குறிப்பிட்டுள்ளது.

"பாகிஸ்தானைச் சீர்குலைப்பது, இங்கு கிரிக் கெட்டை முடிவுக்குக் கொண்டு வருவது ஆகிய வைதான் இந்தத் தாக்குதலின் நோக்கம். வீரர்களுக்கு இவ்வளவு குறைவான பாதுகாப்பு அளிக்கப் பட்டிருந்ததுதான் அதிர்ச்சியடைய வைக்கும் விஷயம்'' என்றும் கான் அந்தப் பேட்டியில் கூறியிருக்கிறார்.

அந்தக் கோணத்தில் பார்த்தாலும் இந்தியாவுக்கே பலன் இருக்கின்றது.

பாகிஸ்தானைச் சீர்குலைப்பதால் ஆப்கானிஸ் தானுக்கு எந்தவொரு பலனும் கிடைக்கப்போவ தில்லை. இருக்கிற பிரச்சினைகள்தான் மேலும் அதிகமாகும். விடுதலைப்புலிகளுக்கும் பாகிஸ் தானைச் சீர்குலைப்பதில் எந்தப் பலனுமில்லை; பாகிஸ்தானில் சர்வதேச கிரிக்கெட் நடை பெறுகிறதா இல்லையா என்பதிலும் எந்தவித அக்கறையும் விடுதலைப்புலிகளுக்கு இருக்கப் போவதில்லை. ஆனால் இந்தியாவுக்கோ அப்ப டியல்ல.

ஏற்கனவே 'தோல்வியடைந்த நாடாக' வர்ணிக் கப்படும் பாகிஸ்தானை தீவிரவாதிகள் பெருகும் இடமாகக் கருதி உலக நாடுகள் ஒதுக்கி வைக்கலாம் என்று இம்ரான் கான் தனது பேட்டியில் அச்சம் தெரிவித்துள்ளார். "தாக்குதல் நடாத்தியவர்கள் பாகிஸ்தானை இருண்ட காலத்துக்குக் கொண்டு செல்ல வேண்டும் என்று விரும்புபவர்கள். நேற்று, பாகிஸ்தானில் பங்குச் சந்தை தலைகீழாக வீழ்ச்சியடைந்தது. பாகிஸ்தான் மீண்டும் பழைய வடிவத்துக்கு வரக்கூடிய நாடு; ஆனால், எங்களுக்குப் பிரச்சினைக்கு மேல் பிரச்சினை வருகிறது'' என்றும் அவர் கூறியிருக்கிறார்.

கிரிக்கெட் தாக்குதலில் வெளிநாட்டுச் சக்திகளுக்குத் தொடர்பிருக்கலாம் என்று கான் நம்புவதை, பாகிஸ்தான் உட்துறை அமைச்சர் ரெஹ்மான்

மாலிக்கும் பிரதிபலிக்கிறார். வெள்ளிக்கிழமை அவர் ஊடகவியலாளர்களிடம், "இந்தச் சம்பவத்தில் வெளிநாட்டுச் சக்திகளுக்குத் தொடர்பிருப்பதை நான் மறுக்கவில்லை'' என்று கூறினார்.

2004ம் ஆண்டிலிருந்து பாகிஸ்தானில் நடாத் தப்பட்டு வரும் தீவிரவாதத் தாக்குதல்கள் அனைத்தும், பழங்குடியினப் பகுதிகளுக்கு ராணுவம் அனுப்பட்டதில் இருந்து, தற்கொலைத் தாக்குதல் களாகவே உள்ளன. கடந்த ஆண்டில் 100 தற்கொலைத் தாக்குதல்கள் நடாத்தப்பட்டுள்ளன. ஆனால், கடந்த வாரம் இலங்கை கிரிக்கெட் அணிக்கு எதிராக துப்பாக்கி ஏந்திய 12 நபர்கள் நடாத்திய தாக்குதல் தற்கொலைத் தாக்குதல் அல்ல.

தப்பிச் செல்லும் வழி தாக்குதலை நடத்தியவர் களுக்கு நன்றாகவே தெரிந்துள்ளது, இது நன்கு திட்டமிடப்பட்ட தாக்குதல். தூண்டிவிடப்பட்டு தங்களையே மாய்த்துக் கொள்ளும் சிந்தாந்த ரீதியிலான தீவிரவாத அமைப்பினரின் தற்கொலைத் தாக்குதலாக இது நிச்சயம் இல்லை.

தாக்குதல் திட்டமிடலில் துல்லியம் மாத்திரமல்ல தாக்கியபின் தப்பிச் செல்வதற்காக சகல ஏற்பாடுகளும் திட்டமிட்டுச் செய்யப்பட்டுள்ளன. தாக்குதலை நடத்தியபின், தாக்குதலாளிகள் தலைமறைவாகச் சிலநாட்கள் மறைந்திருக்க வேண்டியிருக்கலாம் என்பதால், தாக்குதலாளிகள் தம்முடன் சில நாட்களுக்குத் தேவையான உணவுப் பொருட்களையும் எடுத்துச் சென்றிருக்கின்றனர். பொதுவாகவே பாகிஸ்தான் பகுதிகளுக்குள் தீவிரவாதத் தாக்குதல்களை இதுவரை நடத்திய எந்தவொரு தீவிரவாத அமைப்பும் இப்படியான முன்னேற்பாடுகளுடன் தாக்குதல்களை நடத்திய தாகச் சரித்திரமில்லை.

இலங்கையின் கிரிக்கெட் குழு மீது தாக்குதல் நடாத்தப்பட்டிருப்பதால் இந்திய உளவுத்துறை இதில் ஒரு கல்லில் இரண்டு மாங்காய் அடிக்க முடியும். முதலாவது மாங்காய் இலங்கையுடன் சம்மந்தப்படாத விவகாரம். அது, பாகிஸ்தானைப் பழிவாங்குவது.

மும்பாய்த் தாக்குதலின் பின்னணியில் இருந்தது பாகிஸ்தானின் உளவு அமைப்பு ஐ.எஸ்.ஐ.தான் என்பது இந்திய உளவுத்துறைக்கு மிக நன்றாகவே தெரியும். ஆனால், பாகிஸ்தான் அதை ஒப்புக் கொள்ளாததால், றோவால் எதுவும் செய்ய முடியவில்லை. அந்தத் தாக்குதலின்பின் இந்தி யாவின் பொருளாதாரம் வீழ்ச்சியடைந்தது; இந்தியாவுக்குப் பயணம் செய்யவே வெளிநாட்டுப் பயணிகள் அஞ்சும் நிலை ஏற்பட்டது; இந்திய



உளவுத்துறை பற்றிய அவநம்பிக்கை எழுந்தது.

இதற்கெல்லாம் காரணமாக இருந்த பாகிஸ்தான்மீது கிட்டத்தட்ட அதே மாதிரியான தாக்குதல் ஒன்றை நடாத்தி, அதே மாதிரியான பின்னடைவை ஏற்படுத்த இந்திய உளவுத்துறை முயன்றிருக்கலாம். மும்பாயில் வெளிநாட்டுப் பிரஜைகள் குறிவைக் கப்பட்டனர்; லாகூரில் வெளிநாட்டுக் கிரிக்கெட் குழு. இந்தியாவிலும் தாக்குதலின்பின் பொருளாதார வீழ்ச்சி, வெளிநாட்டவர்களின் ஒதுங்கிக் கொள்ளல், உளவுத்துறை மீதான கெட்ட பெயர். பாகிஸ் தானிலும் இப்போது அதே நிலைமை. கிட்டத்தட்ட ஒரு பதிலடி.

இரண்டாவது இலங்கை விவகாரம்.

விடுதலைப்புலிகளுக்கு எதிரான போரில் இலங் கைக்கு இந்தியா என்னதான் உதவிகள் செய் திருந்தாலும், ஆயுத ரீதியில் அதிகபட்ச உதவிகளை வழங்கியது என்னவோ (இந்தியாவுடன் ஒப்பிடும் போது) பாகிஸ்தான்தான். அதனால் இலங்கையின் 'நல்ல புத்தகத்தில்' பாகிஸ்தானின் பெயர் இந்தியாவுக்கு மேலேயே பதிவாகியுள்ளது.

நாளைக்கே பாகிஸ்தான் இலங்கையின் முக்கிய பகுதிகளில் தமது வியாபார மையங்களை அமைப்பதாகச் சொல்லி, இலகுவில் அனுமதி பெறவும் முடியும். அந்த மையங்களில் இருந்து கொண்டு இந்தியாவுக்கு எதிரான காரியங்களைச் செய்யவும் முடியும் (உதாரணமாக உளவு நடவடிக்கைகள்)

இந்தியாவின் உட்துறை அமைச்சர் ப.சிதம்பரம் சமீபத்தில் பாகிஸ்தான் உளவுத் துறையின் ஆதரவு பெற்ற தீவிரவாதிகள் பற்றிக் குறிப்பிடும்போது, அவர்கள் இலங்கை ஊடாகத் தென்னிந்தியாவுக்குள் ஊடுருவும் சாத்தியம் இருப்பதாகக் கூறியிருந்தார். அவர் அதைக் கூறிச் சில தினங்களிலேயே இலங்கையின் கிரிக்கெட் அணி பாகிஸ்தானில் வைத்துத் தாக்கப்பட்டிருப்பதைக் கவனியுங்கள்.

பாகிஸ்தானை இந்தியாவுக்குத் தெரிந்த அளவுக்கு வேறு யாருக்கும் அவ்வளவு நன்றாகத் தெரிந்திருக்க முடியாது. பாகிஸ்தானில் அப்போதும், இப்போதும், எப்போதும் நடைபெறும் வன்முறைகள் துப்பாக்கிச் சூடுகள் எல்லாமே அந்த நாட்டை ஒருவித குழப்ப நிலையிலேயே வைத்திருப்பது இந்திய உளவுத் துறைக்கு நன்றாகவே தெரியும்.

அடிக்கடி துப்பாக்கிச்சூடுகள் நடைபெறுவதால் அங்கெல்லாம் அதுவொன்றும் பெரிய விஷயமல்ல என்று ஒரு அலட்சியப் போக்கு இருக்கும். அதனால் இந்தத் தாக்குதலை நடாத்தியவர்கள் பற்றிய தடயங்களைச் சேகரிப்பதுமுதல், புலன் விசாரணை செய்வதுவரை ஒருவித அலட்சியப் போக்கு இருக்கும் என்பதும் இந்திய உளவுத் துறைக்குத் தெரியும்.



ஒருவேளை இந்தத் தாக்குதல்கள் றோவின் கைங்காரியமாக இருந்தால் தாக்குதலாளிகளின் தடயங்கள் குலைந்து போவது றோவுக்குத்தான் நல்லது.

இலங்கை கிரிக்கெட் அணி மீது தாக்குதல் நடாத்தப்பட்ட இடத்தில், வழக்கு தொடர்பான ஆய்வுக்காக மாதிரிகள் சேகரிக்கப்பட்டபோது கவனமின்மையுடன் செயற்பட்ட நிபுணர்களால் முக்கியமான ஆதாரங்கள் சேதமடைந்துவிட்டன என்று புதன்கிழமை விசாரணை அதிகாரிகளை மேற்கொள்காட்டி டெய்லி டைம்ஸ் செய்தித்தாள் தகவல் வெளியிட்டுள்ளது.

மாதிரிகளைச் சேகரிக்க உள்ள சட்டபூர்வமான முறைகளைக் கடைப்பிடிக்காமல், குற்றம் நடைபெறும் இடத்தில் ஆய்வாளர்கள் ஆதாரங்களைச்

சேகரித்துள்ளனர். அவர்கள் கையுறைகளை அணிய வில்லை. துப்பாக்கிச் சூடு நடாத்தியவர்களின் விரல்ரேகைகள் கொண்ட பொருட்களை அவர் களும் தொட்டனர்.

சட்டம் சார்ந்த ஆய்வுத்துறை நிபுணரான டாக்டர் அஷான், "பாகிஸ்தான் வழக்கமான விரல்ரேகை சேகரிப்பு நடைமுறைகளைப் பொருட்படுத்தாத காரணத்தால், விசாரணை நடவடிக்கைகளுக்கு அது பாதிப்பை ஏற்படுத்துகிறது. குற்றம் நடைபெற்ற இடத்தில் இருந்து கைப்பற்றப்பட்ட ஆயுதங்களில் பதிவான குற்றவாளிகளின் விரல்ரேகைகளைப் பதிவு செய்ய எந்தவிதக் கூடுதல் நடவடிக்கைகளும் எடுக்கப்படவில்லை. காவல்துறை விசாரணை அதிகாரிகள், காவல்துறை உயரதிகாரிகள் ஆகியோர் கையுறை அணியாமல் கைப்பற்றப்பட்ட ஆயுதங் களைத் தொட்டனர்" என்று தெரிவித்தார்.

கைப்பற்றப்பட்ட மூன்று வானங்களையும்கூட காவல்துறையினர் கவனமின்றித்தான் கையாண் டனர். விரல்ரேகைகள் மற்றும் டி.என்.ஏ. மாதிரிகளைச் சேகரிப்பது குறித்து எவரும் கவலைப்படவில்லை.

பஞ்சாப் பல்கலைக்கழகத்தின் மாலிகுலர் பயாலஜி பிரிவு தேசிய மையத்தைச் சேர்ந்தவரான மற்றொரு சட்டம் சார்ந்த விசாரணைப் பேராசிரியர் வாஷிங்டன் போஸ்ட்டுக்கு அளித்த பேட்டியில், "தண்ணீர் போத்தல்கள், அழிக்கப்படக் கூடிய கோப்பைகள், துப்பாக்கிகள், தோட்டாக்களின் மேலுறைகள் ஆகியவை அனைத்திலும் தாக்குதல் நடாத்தியவர்களின் விரல்ரேகைகள் பதிந்திருந்தன. ஆனால், பாதுகாப்புப் படையினர் பலர் கையுறைகள் ஏதும் அணியாமல் அவற்றைத் தொட்டதால், சாட்சியமாக அதைப் பயன்படுத்த முடியாத நிலை ஏற்பட்டிருக்கிறது" என்றார்.

'பாதுகாப்புப் பொறுப்பின் தொடர்ச்சி' குறித்த விதியையும் பாகிஸ்தானிலுள்ள நடைமுறையையும் அவர் விளக்கினார். "குற்றம் நடந்த இடத்தில் உள்ள ஆதாரங்களை அகற்றும் முன்னர் புலனாய் வாளர்கள் அவற்றைப் புகைப்படம் எடுக்க வேண் டும், அவை இருந்த நிலையிலேயே பாதுகாக்கப்பட வேண்டும். பாகிஸ்தானில் துல்லியமான முடிவுகளை அளிக்கக் கூடிய, முழுமையான சட்ட நடைமுறை சார்ந்த ஆய்வுக்கூடங்கள் இல்லாததால், குற்றம் நடந்த இடத்தில் இருந்து ஆதாரங்களைச் சேகரிக்க வேண்டிய அவசியமில்லை"

குற்றவியல் சட்ட நிபுணர் அப்தாப் அகமது பாஜ்வா, "பாகிஸ்தான் மக்கள் கட்சியின் தலைவராக இருந்த பெனாசிர் புட்டோவைப்



படுகொலை செய்யப் பயன்படுத்தப்பட்ட இரண்டு கைத்துப்பாக்கிகளில் இருந்து மூன்று குண்டுகள் சுடப்பட்டதை லாகூரில் உள்ள சட்டம் சார்ந்த அறிவியல் ஆய்வுக்கூடம் உறுதிப்படுத்தியது. ஆனால், பறிமுதல் செய்யப்பட்ட இரண்டு கைத்துப்பாக்கிகளிலும், ஆயுதங்களைத் தவறாகக் கையாண்ட காவல்துறை அதிகாரிகளால் பல்வேறு விரல் ரேகைகள் இருந்தன. இதனால், அவை அங்கீகரிக்கப்படவில்லை" என்று கூறினார்.

மொத்தத்தில் இவையெல்லாம் தாக்குதலை நடத்தியவர்கள் யாரென்பது வெளியுலகுக்குத் தெரியாமல் இருக்கவேண்டும் என்று விரும்பும் நாட்டுக்கோ அல்லது உளவு அமைப்புக்கோ சாதகமான விஷயங்கள்.

இங்குள்ள மற்றொரு விஷயம் என்னவென்றால் எல்லோருடைய விரல்களும் றோவை நோக்கி நீண்டால், "இந்தத் தாக்குதலின் பின்னணியில் இருப்பது விடுதலைப்புலிகள்தான்" என்று றோ பிரச்சாரம் செய்துவிடலாம். என்ன காரணம் சொல்வது? "விடுதலைப்புலிகள் இலங்கை அரசுக்கு எதிராகப் போராடி வருவதால், இலங்கை கிரிக்கெட் அணியைத் தாக்கியது; அதுவும் இலங்கைக்கு ராணுவ உதவிகளைச் செய்யும் பாகிஸ்தானின் மண்ணில் வைத்து இந்தத் தாக்குதலை நடாத்தியது" என்று பொதுப்படையாக றோ பிரச்சாரம் செய்யலாம்.

அல்லது இன்னமும் கொஞ்சம் ஆழமாகவும்

போகலாம். விடுதலைப்புலிகளுக்கும், சர்வதேச இஸ்லாமிய முன்னணியான அல்–காய்தாவின் உறுப்பினரான ஹர்கத்–உல்–முஜாகிதீன் (HUM) அமைப்புக்கும் (இதே அமைப்பு 1997க்கு முன் ஹர்கத்–உல்–அன்சர் என்று அழைக்கப்பட்டது) உள்ள முந்தைய தொடர்புகளைப் பற்றி றோ ஏற்கனவே கூறிவந் திருக்கிறது. பாகிஸ்தான் பகுதிக்கு ஆயுதங்களைக் கடத்த 1990களில் விடுதலைப்புலிகளின் வர்த்தகக் கப்பல்களை ஹர்கத் உல் முஜாகிதீன்கள் பயன்படுத்தி வந்துள்ளனர் என்று றோ கூறுவது வழக்கம். அதை இப்போது உபயோகித்துக் கொள்ளலாம்.

1993ம் ஆண்டு இந்திய கடலோரக் காவல் படையினரால் மறிக்கப்பட்ட கிட்டு பயணம் செய்த கப்பலில் வந்த ஆயுதங்கள் மற்றும் தளவாடங்களை கராச்சியில் HUM உறுப்பினர்கள் கப்பலில் ஏற்றி விட்டதாகவும், பாகிஸ்தானின் உளவு அமைப்பான ஐ.எஸ்.ஐ. மற்றும் பாகிஸ்தானின் கடற்படையைச் சேர்ந்த சில அதிகாரிகள் முன்னிலையில் ஆயுதங்கள் ஏற்றப்பட்டதாகவும் தங்களது விசாரணையில் தெரியவந்ததாக இந்தியா கூறியிருந்தது.

அத்துடன், தெற்கு பிலிப்பைன்ஸில் உள்ள ஜிகாதி இயக்கங்களிடம் இருந்து ஆயுதங்கள் மற்றும் தளவாடங்களை HUM அமைப்பு புலிகளின் கப்பல்கள் மூலம் கடத்துவதற்கு விடுதலைப்புலிகள் உதவிகரமாக இருந்ததாகவும், இதற்காக சில விமான எதிர்ப்பு ஆயுதங்கள் மற்றும் தளவாடங்களையும், தரையில் இருந்து வானை நோக்கி ஏவக் கூடிய ஏவுகணைகள் சிலவற்றையும் விடுதலைப்புலிகளுக்கு ஐ.எஸ்.ஐ. பரிசாக அளித்ததாகவும் 1994–95ல் றோ தெரிவித்திருந்தது.

HUM அமைப்பு இப்போதும் தொடர்ந்து இயங்கி வருகிறது. இதன் பின்னணியில், HUM அல்லது அதன் கூட்டாளிகள் விடுதலைப்புலிகளுக்கு தாங்கள் பட்டுள்ள கடனை அடைப்பதற்காக இலங்கைக் கிரிக்கெட் அணி மீது தாக்குதல் நடாத்தியிருக்கலாம் என்ற கோணத்திலும் விசாரணை நடத்தப்பட வேண்டும் என்று தான் தப்பித்துக்கொள்ள றோ வலியுறுத்தலாம்.

ஐ.எஸ்.ஐ. உளவு அமைப்பின் தலைவராக இருந்து ஓய்வுபெற்ற ஜெனரல் ஹமீத் குல் உட்பட பலரும் இந்தியாவின் றோ அமைப்பு மீதே குற்றம் சுமத்துகின்றனர். ஆனால், பாகிஸ்தானில் இது போன்ற ஒரு தாக்குதல் நடாத்துவதற்கு றோ அமைப்பிற்கு போதிய திறமை கிடையாது என்றும் அவர்கள் கருதுகின்றனர். அதாவது றோ திட்டமிட்டு, ஆயுதமும் நிதியுதவியும் வழங்கி, வேறு யாரையாவது வைத்து இந்தத் தாக்குதலை நடாத்தியிருக்கலாம் என்பது ஜெனரல் ஹமீத் குல்லின் கணிப்பு.

பாகிஸ்தானில் றோ அமைப்பின் செயற்பாடுகள் இரண்டு வகையாக உள்ளன. பாகிஸ்தான் பாதுகாப்புத்துறை நிறுவனங்களின் கோப்புகளில் குறிப்பிட்டபடி பார்த்தால் இரண்டே இரண்டு வகைச் செயற்பாடுகளைத்தான் கூறமுடியும்.

1– நகர மையப்பகுதியில் சிறிய அளவிலான குண்டு வெடிப்புகளை நிகழ்த்துவதுண்டு.

2–அரசியல் ரீதியாகக் கட்சிகளைப் பயன் படுத்திக்கொண்டு சட்டம் ஒழுங்குப் பிரச்சினையை ஏற்படுத்துவது.

1970ம் ஆண்டுகளில் அவாமி லீக் கட்சியையும், அவாமி தேசிய கட்சியின் தேசிய துணைக் கட்சியான பாஸ்தூன், பலூச் விடுதலை ராணுவம் மற்றும் முத்தெஹிடா குவாமி இயக்கம் என்று அமைப்புக்களையும் பாகிஸ்தானில் றோ பயன் படுத்திக்கொண்டது. இருந்தாலும், இந்தக் கட்சிகள் அனைத்தும் அரசியல் லாபத்திற்காக மட்டுமே பயன்படுத்திக் கொள்ளப்பட்டன. மற்றபடி வேறு எந்தப் பயனும் இல்லை.

பாகிஸ்தானில் சட்டம் ஒழுங்குப் பிரச்சினையை ஏற்படுத்துவதற்காகக் குண்டு வெடிப்புச் சம்ப வங்களையே றோ பயன்படுத்தும். அல்லது சிறிய அளவிலான கத்திக்குத்து சம்பவத்தை ஏற்படுத்தும். இந்தியாவில் வன்முறையை ஏற்படுத்த ஐ.எஸ்.ஐ. செயற்படுத்தியது போல, பாகிஸ்தானில் கெரில்லா நடவடிக்கையை ஏற்படுத்தும் அளவுக்கு றோ அமைப்புக்குத் திறமை இல்லை. மொத்தத்தில் றோ இந்தக் காரியத்தைச் செய்திருக்கலாம். ஆனால், நேரடியாக அல்லாமல் பின்னணியில் இருந்து கொண்டு வேறு ஏதோ ஒரு அமைப்பை உபயோகித்து!



# தொலைபேசியின் ஒரு முனையில் எப்போதும் ஜனாதிபதி

அமெரிக்க ஜனாதிபதி பராக் ஒபாமாவுக்கு அவரது பிளாக்பெர்ரி மீது ஆசை இருக்கிறதோ இல்லையோ தொலைபேசியில் பேசுவது அவருக்கு கொள்ளைப் பிரியம் போலும். ஓவல் அலுவலகத்திலோ அல்லது Air Force One என்ற தனது விசேட விமானத்திலோ சிறிது நேரம் 'ஹாயாக' அமர்வதற்கு நேரம் கிடைத்தால் போதும் தொலைபேசியை எடுத்து யாருடனாவது பேசத் தொடங்கிவிடுவார். இப்படி ஒரு பழக்கம் அவருக்கு இருப்பது சமீபத்தில்தான் வெளியில் தெரியவந்தது.

ஒருமுறை அனாயசமாக தொலைபேசியை எடுத்து முன்னாள் ஜனாதிபதி ஜோர்ஜ் டபிள்யூ புஷ்ஷிடம் தொடர்புகொண்டுப் பேசத் தொடங்கினார். இதை யாரும் எதிர்பார்க்கவில்லை. அவர் பேசிய விஷயமும் எதிர்பாராதது என அவர்களது உதவியாளர்கள் கூறினர். அடுத்த 19 மாதங்களில் ஈராக்கிலிருந்து அமெரிக்கப் படைகளைத் திரும்பப் பெற முடிவு செய்திருப்பதாக அப்போது புஷ்ஷிடம் ஒபாமா தெரிவித்தார்.

இதுபோல, கடந்த வாரம் ஒபாமா அடிக்கடி தொலைபேசியில் பேசினார். இது அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது. அமெரிக்க மேலவை உறுப்பினர்கள், மாகாண ஆளுநர்கள், முக்கியப் பிரமுகர்கள் என அவர் அடிக்கடி யாரையாவது தொலைபேசியில் அழைத்துப் பேசி வந்தார். இதுமட்டுமல்லாமல் பல்வேறு துறை வல்லுநர்களுடனும் அவர் அடிக்கடி தொலைபேசியில் தானே நேரடியாகப் பேசி ஆலோசனைகள் பெற்றதைக் காண முடிந்தது.

“ஒபாமா பல விஷயங்களைப் படிக்கிறார். ஏராளமான தகவல்களைக் கேட்டுப் பெறுகிறார். அதைவிட 'டக்'கென தொலைபேசியை எடுத்து யாரையாவது கூப்பிட்டு எதையாவது பேசிக் கொண்டிருக்கிறார்” என்கிறார் வெள்ளை மாளிகையின் பத்திரிகைத்துறைச் செயலாளர் Robert Gibbs. ஜனாதிபதி ஒபாமா தனது அறையிலிருந்து அடிக்கடி தொலைபேசியில் பேசும்போது அருகில் இருப்பது அவர் ஒருவர் மட்டும்தான்.

உதாரணமாக கடந்த சனிக்கிழமை மாலை ஓவல் அலுவலகத்தில் இருந்தபோது கன்சாஸ் மாகாண ஆளுநர் Kathleen Sebeliusஐ தொலைபேசியில் தொடர்புகொண்டு அந்தப் பெண்மணியை அமெரிக்க சுகாதார மற்றும் மனித வள மேம்பாட்டு அமைச்சகம் நியமனம் செய்யத் தேர்வு செய்திருப்பதாகக் கூறினார்.

இதுபோன்ற மரியாதை நிமித்தமான தொலைபேசிப் பேச்சுகளை எல்லா ஜனாதிபதிகளும் நடாத்துவது இயல்புதான். ஆனால், அவர்களெல்லாம் ஒபாமாவைப்போல தொலைபேசியே கதி என இருப்பவர்கள் அல்ல என்று எழுதியிருக்கிறது வாஷிங்டன் போஸ்ட்.



யாருடைய உதவியையும் எதிர்பாராமல் பல எண்களை அவரே அழுத்திப் பேசுகிறார். வெள்ளை மாளிகை தொலைபேசி இணைப்பகம் மூலம் உலகில் உள்ள எவரது தொலைபேசியுடனும் தொடர்பு ஏற்படுத்தித் தருவதற்கு முன்பாக ஒபாமாவே சம்பந்தப்பட்டவருடன் தொடர்புகொண்டு பேசி விடுகிறார்.

"வாஷிங்டனில் ஓராண்டு காலம் பொழுதைக் கழித்தவர்களுக்குச் செனட்டர் என்ற முறையில் பிடித்த விஷயம் என்ன?" என்று *2005*ம் ஆண்டு டிசம்பர் *16*ம் திகதி ஒரு பேட்டியின்போது பல செனட்டர்களிடம் கேள்வி கேட்கப்பட்டது. அப்போது வெறும் செனட்டராக இருந்த ஒபாமா, தொலைபேசியில் பேசுவதுதான் தனக்கு மிகவும் பிடித்த விஷயம் எனப் பதிலளித்திருந்தார். அவரது இந்த அலாதிப்பிரியம் இன்னும் குறையாமல் இருப்பதுதான் ஆச்சரியமான விஷயம்.

எனக்கு விருப்பமான விஷயம் எதுவாக இருப்பினும் அது பற்றி நன்கறிந்த நபர்கள் எங்கிருந்தாலும் அவர்களுடன் தொலைபேசியில் தொடர்புகொண்டு விவாதிப்பது தனது பழக்கம் என ஒபாமா கூறியுள்ளார். சில நேரம் சம்பந்தப்பட்டவர் தனது அலுவலகத்திற்கே விவாதிக்க வந்து விடுவதுண்டு எனவும் அவர் குறிப்பிட்டார். "இது கொஞ்சம் ஆடம்பர அலட்டலாக இருந்தாலும் இதைத் தவிர்க்க முடியவில்லை" என்கிறார்.

"நிதி விஷயங்கள் பற்றி விவாதிக்க விரும்பினால் Warren Buffetயை அழைத்துப் பேசுவேன். உடல் நலம் பற்றி விவாதிக்க விரும்பினால் அமெரிக்காவில் யார் அந்த விஷயத்தில் நிபுணர் என அறிந்து அவரிடம் விரிவாக விவாதிப்பேன்" என்று கூறும் ஒபாமா, "வெளியுறவுத்துறை சம்பந்தமான விஷயமாக இருப்பின் அமெரிக்காவைச் சேர்ந்தவர்களிடம் மட்டுமல்லாது வெளிநாடுகளைச் சேர்ந்த நிபுணர்களுடன் விவாதிப்பேன்" என்கிறார்.

அமெரிக்க ஜனாதிபதிகள் பற்றிய விஷயங்களை வெள்ளை மாளிகையில் உள்ள ஆவணக் காப்பகத்தில் காணலாம். அதிலுள்ள ஒரு தகவலின்படி வெள்ளை மாளிகையிலிருந்து முதன்முதலாக வெளிநாட்டுக்குத் தொலைபேசியில் பேசிய ஜனாதிபதி Woodrow Wilson என்பவர்தான். இவர் *1915*ம் ஆண்டு ஜனவரி *25*ம் திகதி முதன்முதலாக வெள்ளை மாளிகையிலிருந்து வெளிநாட்டுக்குப் பேசிய பெருமை உடையவர்.

வெள்ளை மாளிகையிலிருந்து ஒபாமா தொலைபேசியில் பேசத் தொடங்கியது எப்படி, எப்போது என்றால் அவர் முதன்முதலாக ஜனாதிபதி மாளிகைக்கு வந்து ஒரு மணி நேரத்திலிருந்துதான் (ஜனவரி *21*ம் திகதி காலை) மத்திய கிழக்கு நாடுகளில் *4* தலைவர்களுடன் மத்திய கிழக்கு நாடுகளில் அமைதி திரும்பச் செய்வது குறித்து அப்போது அவர் பேச்சு நடாத்தினார்.





இதையடுத்து சீனா, லெபனான், கொலம்பியா, தென்னாபிரிக்கா உட்பட பல நாடுகளின் தலைவர்களுடன் அவர் தொலைபேசி மூலம் உரையாடல் நடாத்தினார். ஜப்பான், அவுஸ்திரேலியா, கனடா, ஈராக் ஆகிய நாடுகளின் பிரதமர்களுடனும் சௌதி அரேபியா மன்னருடனும் ஒபாமா தொலைபேசியில் பேசியிருக்கிறார்.

ஓவல் அலுவலகத்தில் தனது மேசையில் உள்ள மிகப் பாதுகாப்பான தொலைபேசி மூலம்தான் அவர் முக்கியமாகப் பேசுகிறார். இந்தத் தொலைபேசியிலிருந்து அழைப்பு வருவதை பிற நாட்டுத் தலைவர்கள் கௌரவமாகக் கருதுகின்றனர். இந்தத் தொலைபேசியிலிருந்து பேசுவதை யாரும் ஒட்டுக் கேட்க முடியாது.

David Axelrod என்பவர் ஒபாமாவின் மூத்த ஆலோசகர். அவரைக்கூட ஒபாமா தொலைபேசி மூலம் திடீர்திடீர் என அழைத்துப் பேசுவாராம். ஒருமுறை இரவு *11* மணிக்கு இரவு சாப்பாடு சாப்பிட்டுக்கொண்டிருந்தபோது திடீரென ஒபாமா தொலைபேசியில் கூப்பிட்டுவிட்டாராம். இப்படி அர்த்த ராத்திரியில் அடிக்கடி ஒபாமாவின் தொலைபேசி அழைப்புத் தனக்கு வந்ததாக அவர் கூறினார். *2* ஆண்டுகள் ஒபாமாவுடன் தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டிருந்த சமயமும் அவர் இப்படி நேரங்காலம் தெரியாமல் அழைத்துள்ளாராம்.

ஓவல் அலுவலகத்தில் சாம்பல் நிறத்தில் பெரிய சைஸில் உள்ள அந்தத் தொலைபேசியிலிருந்து ஸ்பீட் டயலிங் முறையில் ஒவ்வொருவரையும் (மூத்த ஆலோசகர் Axelrod முதல் சி.ஐ.ஏ. இயக்குநர் வரை பலரையும்) கிட்டத்தட்ட ஒவ்வொரு நாளும் ஒபாமா அழைத்துப் பேசுவது வழக்கம். Air Force One விசேட விமானத்திலுள்ள தனது அலுவலகத்திலும் அதே மொடலிலான ஸ்பீட் டயலிங் கொண்ட தொலைபேசியை ஒபாமா வைக்குமாறு கூறி, அப்படியே வைக்கப்பட்டிருக்கிறது.

அமெரிக்க ஜனாதிபதி பயணம் செய்யும் limousine கார்களில் ஏராளமான தொலைபேசிகள் உள்ளன. அவற்றையும் ஒபாமா அதிகம் விரும்புவார். இந்தத் தொலைபேசிகளை எடுத்த மாத்திரம் யாருடன் பேச வேண்டும் எனக் கூறினால்போதும் அசுர வேகத்தில் அது செயற்பட்டு கண்ணிமைக்கும் நேரத்தில் ஒபாமா விரும்பும் எண்ணில் மணியடிக்கச் செய்துவிடும். ஜனாதிபதி பேச விரும்பிய நபர் எதிர்முனையில் தயாராக இருந்தால் சரி. இல்லாவிட்டால் அடுத்த நபரை அழைத்து விடுவாராம்.

# ராணுவத் தளபதியும் ஜனாதிபதியும்

# ஆளையாள் கொல்லத் திட்டமிட..



சிறிய மேற்கு ஆபிரிக்க நாடான கினியா பிஸ்ஸோவின் ஜனாதிபதி Joao Bernardo Vieira தனது நாட்டு ராணுவத்தினராலேயே சுட்டுக் கொல்லப்பட்டிருக்கிறார். இவரது கொலைக்குமுன் ஒரு குண்டுவெடிப்பின் போது அந்நாட்டின் ராணுவத் தலைமை அதிகாரி கொல்லப்பட்டதைத் தொடர்ந்து ராணுவ வீரர்கள் அந்நாட்டு ஜனாதிபதியைச் சுட்டுக் கொன்றுள்ளனர்.

கடந்த ஞாயிற்றுக்கிழமை இரவு நாட்டின் தலைநகரான பிஸ்ஸோவில் குண்டுவெடித்ததில் ராணுவத் தலைமை அதிகாரியான ஜெனரல் Batista Tagme Na Wai உயிரிழந்தார். இதற்குக் காரணம் அந்நாட்டு ஜனாதிபதிதான் எனக் கூறி திங்கட்கிழமை ராணுவத்தினர் அவரைச் சுட்டுக் கொன்றுள்ளனர். திங்கட்கிழமை அதிகாலை 5 மணி அளவில் ஜனாதிபதியின் வீட்டுக்கு வெளியே அவரைச் சுட்டுக் கொன்றனர் என அரசு அதிகாரிகள் இத்தகவலை உறுதிபடுத்தியிருக்கின்றனர். ஜனாதிபதி கொல்லப்பட்டதையடுத்து, நாட்டின் எல்லைப் பகுதிகள் அனைத்தும் மூடப்பட்டன.

ஜனாதிபதியைக் கொல்வதற்கான உத்தரவை ராணுவத்தில் கொடுத்தது யார் என்று இதுவரை வெளியிடப்படவில்லை. மேலும், அந்நாட்டு ராணுவம் அடுத்து எத்தகைய நடவடிக்கைகளை மேற்கொள்ளப் போகிறது என்றும் தெரியவில்லை.

ஜனாதிபதியைச் சுட்டுக் கொன்றதற்கு ராணுவம் பொறுப்பாகாது. இதை தனிப்பட்ட ஒரு ராணுவ வீரர் குழு ஒன்று செய்துள்ளது என அந்நாட்டு வானொலியில் உரையாற்றிய புதிய ராணுவத் தலைமை அதிகாரி தெரிவித்துள்ளார். அடுத்த ஜனாதிபதியை 3 மாதங்களுக்குள் தேர்ந்தெடுக்கும் வரை நாட்டின் சட்டம் ஒழுங்கை ராணுவம் காப்பாற்றும் என்றும் அந்த அதிகாரி தெரிவித்துள்ளார்.

கினியா பிஸ்ஸோ முன்னாளில் போர்த்துக்கீசிய காலனி ஆதிக்கத்தின்கீழ் இருந்த நாடு. ஐரோப்பிய நாடுகளுக்குச் செல்லும் தென்னாபிரிக்கக் கப்பல்களின் தளமாக இந்த நாடு விளங்கியது. நாட்டிலிருந்த அரசியற் குழப்பநிலை காரணமாக, இடைக்கால ஏற்பாடாக இங்கு கப்பல்கள் வந்து தங்கிச் செல்வது தற்காலிகமாக நிறுத்தப்பட்டிருந்தன.

1980 மற்றும் 1990களில் இங்கு ராணுவ ஆட்சி நடந்தது. 69 வயதான Vieira 2005ம் ஆண்டில் மீண்டும் ஆட்சிக்கு வந்தார். போர்த்துக்கீசியர்களின் ஆட்சி இப்பகுதியில் 1970களில் நடந்தது. 1970களின் மத்தியில் அவர்களுக்கு எதிராக கெரில்லா போர் முறையை மிகவும் தீவிரமாக மேற்கொண்டார் Vieira. ஆபிரிக்க காலனி நாடுகளுக்கு போர்த்துக்கீசியர்கள் சுதந்திரம் அளிக்கும்வரை இத்தகைய தாக்குதல் தொடர்ந்தது. அந்த வகையில் தற்போது கொல்லப்பட்டுள்ள ஜனாதிபதி ஒரு முன்னாள் போராளியே. கடந்த சில மாதங்களாக Vieiraவின் ஆட்சி ஸ்திரத்தன்மையின்றி இருந்தது. இதற்குக் காரணம், மக்கள் ஆட்சிக்கும் ராணுவத்தினருக்கும்

இடையேயான மோதல் போக்கு அதிகரித்ததேயாகும். இதையடுத்து சுமார் 400 பேரை தனது பாதுகாவலராக நியமித்துக் கொண்டார் ஜனாதிபதி. இந்தப் பாதுகாப்புப் படை வீரர்கள் ஜனவரியில் ராணுவக் கொமாண்டரைக் கொலைசெய்யச் சதித்திட்டம் தீட்டியதாக குற்றச்சாட்டு எழுந்தது.

அதிலிருந்தே ராணுவத் தளபதி மற்றும் ஜனாதிபதி ஆகிய இருவருமே ஆளையாள் குறிவைத்திருப்பதாகப் பேச்சுக்கள் அடிபட்டுக் கொண்டிருந்தன.

ஆபிரிக்க நாடான கினியா பிஸ்ஸோ ஆபிரிக்க நாடுகளிலேயே மிகவும் ஏழ்மையான நாடு. இந்நாட்டிலிருந்துதான் ஆபிரிக்க கஷூ அதிகளவில் ஏற்றுமதி செய்யப்படுகிறது. நாட்டின் பொருளாதாரத்தைத் தாங்கும் முக்கியமான ஏற்றுமதிப் பொருளே இதுதான். அதைவிட வேறு வருமானம் என்னவென்று பார்த்தால், போதைப் பொருள் கடத்தல் மிகவும் அதிகமாக உள்ளது. அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுத்துவிட்டு, போதைப் பொருட்களைக் கடத்துவது இந்த நாட்டில் சர்வ சாதாரணமாக நிகழ்ந்து வருகிறது.

கடலோரப் பகுதிகளிலும், விமானத் தளங்களிலும் இத்தகைய நடவடிக்கைகள் அதிகம் உள்ளன. கொக்கேய்ன் ரகத்திலான போதைப் பொருள் இங்கு அதிக அளவில் கடத்தப்படுகிறது.

"நாடு சுதந்திரம் அடைந்து பல ஆண்டுகள் ஆன பின்னரும், இங்கு குறிப்பிடத்தக்க முன்னேற்றம் எதுவும் ஏற்படவில்லை" என மக்கள் அமைப்பு ஒன்றின் ஒருங்கிணைப்பாளரான முஸ்தபா டயால்லோ தெரிவிக்கிறார். "இந்நாட்டில் ஏராளமான வளங்கள் உள்ளன. ஆனால், அவற்றை முறையாகப் பயன்படுத்தவில்லை. அதிக அளவில் குழப்பம் நிலவுகிறது"

பிரஸ்ஸல்ஸில் உள்ள இண்டர்நாஷனல் கிரைசிஸ் குரூப் ஆய்வு மையத்தைச் சேர்ந்த ஒருவர், "1974ல் போர்த்துக்கீய காலனி ஆதிக்கத்தில் இருந்து இந்நாடு விடுவிக்கப்பட்டாலும், உள்நாட்டுக் குழப்பம் இன்னும் தீரவில்லை. ஒருவரை பதவியில் அமர்த்துவதும், திடீரெனத் தூக்கியெறிவதும் அங்கு சகஜமாக நடந்து வருகிறது" என்கிறார். அதுபோல, சமூகவிரோத நடவடிக்கைகளில் ஈடுபட்டுவோரின் எண்ணிக்கையும் அதிகரித்துள்ளது என்றும் அந்த அமைப்பு தெரிவிக்கிறது.

அடீஸ் அபாபாவைச் (எத்தியோப்பியா) சேர்ந்த ஆபிரிக்க ஒன்றியம், ஜனாதிபதியின் கொலைக்குக் கடும் கண்டனம் தெரிவித்துள்ளது. இதுகுறித்து இந்தக் குழுவின் மூத்த தலைவரான ஜீன் பிங்க் தமது கண்டன அறிக்கையை வெளியிட்டுள்ளார்.

ஃபிரடெரிக் ஃபோர்சித். இவர் ஒரு பிரிட்டிஷ் நாவலாசிரியர். பல்வேறு நாவல்களை இவர் எழுதியுள்ளார். அவர் அண்மையில் எழுதிய தமது நாவல் கினியா பிஸ்ஸோவில் நடைபெறும் சம்பவங்களை மையமாக எழுதப்பட்டிருந்தது. அங்கு நிலவும் உண்மை நிகழ்வுகளை கற்பனை கலந்து நாவலாக வடித்துள்ள இவர், இந்த நாட்டில் காலடி எடுத்துவைத்த சமயத்தில்தான் அதிர்ச்சியூட்டும் சம்பவங்களாக நாட்டின் ராணுவத் தலைமை அதிகாரியும் ஜனாதிபதியும் அடுத்தடுத்து கொல்லப்பட்டுள்ளனர்.

"ஹோட்டலில் தங்கியிருந்த நான், தூங்காமல் புத்தகம் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தேன். திங்கட்கிழமை அதிகாலையில் திடீரென சத்தம் ஹோட்டலுக்கு வெளியே கேட்டது. அந்தச் சத்தம் ஜனாதிபதியின் மாளிகையின் முன்பகுதியில் இருந்து கேட்டது என்பது பின்னர்தான் தெரிய வந்தது. அதுவும் ஜனாதிபதியின் மீது துப்பாக்கியால் சுட்டதுதான் அந்தச் சத்தம் என்பதை உணர்ந்துகொண்டேன்" என்கிறார் நாவலாசிரியர்



ஃபோர்சித். அன்றைய தினம் ஹோட்டல் அறையிலிருந்து ஃபோர்சித் வெளியே சென்றபோது, ராணுவ வீரர்கள் வீதிகளில் பாதுகாப்புக் கடமை களை மேற்கொண்டிருந்தனர். அவரை யாரும் கண்டு கொள்ளவில்லை. அன்று இரவு ஜனாதிபதிக்கு சிகிச்சை அளித்த மருத்துவருடன் உணவு உண்டார் நாவலாசிரியர்.

தான் கேள்விப்பட்ட சம்பவங்களை விபரிக்கும் போது, "ஜனாதிபதியின் வீட்டில் முதலில் ரொக்கெட் தாக்குதல் நடந்துள்ளது. அதையடுத்து, நான்கு முறை துப்பாக்கியால் சுட்டனர். பின்னர் அங்கு வந்த டிரக்கில் ஏறி அவர்கள் தலைமறைவாகி விட்டனர். இதில் மிகவும் கொடூரமான முறையில் இறந்துள்ளார் ஜனாதிபதி. தமது ராணுவத் தலைவரைக் கொன்றதற்குக் காரணமாக இருந் தவரை ராணுவ வீரர்கள் சுட்டுக் கொன்றுள்ளனர் என்று சொல்லப்படுகின்றது. அது எந்தளவுக்கு உண்மை என்று தெரியவில்லை" எனத் தமக்கு தகவல் கிடைத்ததாக நாவலாசிரியர் தெரிவிக்கிறார்.

"இந்த நாட்டை நீங்கள் சுற்றி வந்தீர்களானால், சிதைந்த கட்டடங்கள், மலைபோல் குவிந்த குப்பைகள் ஆகியவற்றைக் காணலாம். கடற்ப டையில் கப்பல் இருக்காது. விமானப் படையில் விமானம் இருக்காது. அடிப்படை வசதிகள் எதுவும் கிடையாது. மின் வசதி கிடையாது" என்று தெரிவிக்கும் ஃபோர்சித் 1950களில் விமானப் படையில் பைலட்டாக இருந்துள்ளார். மேலும், ரொய்ட்டர்ஸ் மற்றும் பி.பி.சி.க்கு வெளிநாட்டு ஊடகவியலாளராக இருந்துள்ளார்.

இவரது முதல் நாவல் மிகப்பிரபலமான The Day of the Jackal. இது பிரான்ஸ் ஜனாதிபதி சாள்ஸ் டி கோலை படுகொலை செய்வதற்குத் திட்டமிடுவது தொடர்பானது. 1971ம் ஆண்டு வெளியான இந்த நாவல் உலக அளவில் அதிக அளவில் விற் பனையாகி அதன்பின் திரைப்படமாகவும் வெளி வந்தது. 1974ல் The Dogs of War என்ற நாவலை எழுதினார். ஜாங்கோரோ நாட்டில் நிகழ்ந்த கதையைக் கற்பனை கலந்து எழுதிய அந்த நாவலும் படு ஹிட். The Dogs of War நாவலில் குறிப்பிடப்படும் நாடு கினியா பிஸ்ஸோவுக்கு 2,700 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. ஃபோர்சித் அடுத்த ஆண்டு ஒரு நாவலை வெளியிடத் திட்டமிட்டுள்ளார். இது கினியா பிஸ்ஸோவைப் பற்றிய நாவல் என்பதால், அந்நாட்டை நேரில் சென்று பார்த்துவிட்டு எழுதுவதற்கே இம்முறை அங்கு சென்றிருந்தார். நாட்டின் ஜனாதிபதியின் கொலையையும் நேரில் பார்த்துவிட்டார்.

எழுதப்போகும் புதிய நாவலில் சம்பவங்களைக் கற்பனை செய்யத் தேவையில்லாதபடி எல்லாமே நிஜமாக நடந்திருக்கின்றன.





மிகச்சரியாக 10 ஆண்டுகளுக்கு முன் ஈராக்கிலுள்ள குர்த் இன மக்களை விஷவாயு செலுத்திக் கொன்றதாக ஈராக்கிய நீதிமன்றத்தில் வழக்கு நடந்து வந்தது உங்களுக்கு ஞாபகம் இருக்கலாம். ஈராக்கின் முன்னாள் துணை ஜனாதிபதி தாரிக் அஜிஸ், அவரது நண்பர் 'கெமிக்கல் அலி' என்ற அழைக்கப்படும் அலி ஹசன் மஜித் ஆகியோர் மீது குற்றம் சுமத்தப்பட்டிருந்தது.

வழக்கு விசாரணையில் கடந்த வாரம்தான் தீர்ப்பு வழங்கப்பட்டிருக்கிறது.

இதில் தாரிக் அஜிஸ் மீதான குற்றம் நிரூபிக்கப் படாததால் விடுதலை செய்யப்பட்டிருக்கிறார். ஆனால், அலி ஹசன் மஜித்தை சாகும்வரை தூக்கில் போடும்படி நீதிமன்றம் உத்தரவிட்டது. குர்த் இன மக்களைக் கூண்டோடு கொன்றது மற்றும் ஷைடே இன மக்களை கும்பல் கும்பலாகக் கொலை செய்தது தொடர்பாக ஏற்கனவே இரண்டு முறை வெவ்வேறு ஆட்களுக்கு தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டுள்ளது.

1999ம் ஆண்டு பெப்ரவரி 10ம் திகதி இஸ்லாமிய மதகுரு முகம்மது சதக் அல்–சதர் என்பவர் படுகொலை செய்யப்பட்டதற்குப் பழிவாங்கும் நோக்கத்தில், அப்போதைய ஜனாதிபதி சதாம் ஹூசேனின் உத்தரவுப்படி வெள்ளிக்கிழமை நடந்த தொழுகையின்போது இஸ்லாமியர்களின்மீது விஷ வாயு செலுத்திக் கொலை செய்யப்பட்டனர். பாக்தாத்தில் ஷைடே இன மக்கள் வாழும் சேரிப்பகுதியான சதர் நகரத்தில் அந்தத் தாக்குதல் நடாத்தப்பட்டது. அந்த வழக்கில்தான் தற்போது அலிக்கு தண்டனை வழங்கப்பட்டுள்ளது.

தண்டனை விபரம் குறித்து அறிவிக்கப்பட்டபோது மிகவும் வயதான அலி முகத்தில் எந்தவித மாற்றமும் காணப்படவில்லை. தனது உறவினர் மற்றும் தலைவராகக் கருதப்பட்ட சதாம் ஹூசேன் 2006ம் ஆண்டு டிசம்பர் மாதம் தூக்கில் போடப்பட்டு

# ராணுவத்திடம் உயிருடன் அகப்படுவதைவிட இறந்துபோவேன்





கொல்லப்பட்டபின் தற்போது தண்டனையை ஏற்பதால் எந்தச் சலனமுமின்றி இருந்தார். இந்தத் தண்டனையை அலி எதிர்பார்த்தும் இருக்கலாம். வழக்கில் குற்றம்சாட்டப்பட்ட மற்றொருவரான முன்னாள் ஜனாதிபதியின் தனிச் செயலாளர் அபித் ஹமீத் மக்முத்வுக்கும் ஆயுள் தண்டனை வழங்கப்பட்டிருக்கிறது.

அதேநேரத்தில் யாரும் எதிர்பார்த்திராத திருப்பமாக, ஈராக்கின் முன்னாள் துணை ஜனாதிபதி தாரிக் அஜிஸ் மீதான குற்றம் நிரூபிக்கப்படாததால் அவர் விடுதலை செய்யப்பட்டிருக்கிறார். இதற்கு அரபு நாடுகளிடையே வரவேற்பும், எதிர்ப்பும் கலந்து காணப்படுகிறது. தீர்ப்புக் கூறப்பட்டதும் அவர் நீதிபதியைப் பார்த்து 'மிகவும் நன்றி' என்று கூறியதால் கடும் விமர்சனம் எழுந்துள்ளது.

தாரிக் அஜிஸ் மீது இன்னும் ஒரு வழக்கு விசாரணை நிலுவையில் உள்ளது. 1992ம் ஆண்டு கொள்ளை லாபம் சம்பாதிக்கும் நோக்கத்தோடு செயற்பட்ட வணிக வியாபாரிகள் 42 பேரைக் கொலை செய்ததாக இவர்மீது குற்றம் சுமத்தப்பட்டுள்ள வழக்கு அது.

73 வயதான தாரிக் அஜீசின் உண்மையான பெயர் மிகையில் யுஹானா. 1936ம் ஆண்டு பிறந்த இவர், 1983 முதல் 1991ம் ஆண்டு வரை ஈராக்கின் வெளியுறவு அமைச்சராகக் கடமையாற்றி வருகிறார். அதன்பிறகு 2003ம் ஆண்டு வரை துணை ஜனாதிபதியாக அங்கீகரிக்கப்பட்டார். சதாம் பதவியிலிருந்தபோது அவர் மிகவும் அரிதாகவே வெளிநாடுகளுக்குச் செல்வது வழக்கம். ஐரோப்பிய நாடுகளுக்குச் செல்லவே இல்லை. அரபு நாடுகள் கூட்டத்தில் பங்கேற்கவும், வெளிநாடுகளுக்குத் தன் சார்பாகச் செல்லவும் தாரிக் அஜீஸை அனுப்பி வைப்பதே சதாமின் வழக்கம்.

தாரிக் அஜிஸ் எந்தவொரு காலத்திலும் ராணுவ அதிகாரியாக இருந்தது இல்லை. ஆனாலும், ராணுவ உடையில்தான் எப்போதும் காணப்படுவார். சதாம் ஆட்சியில் இடம்பெற்ற உயர் அதிகாரிகள் பெரும்பாலானோர் ராணுவத்தில் கடமையாற்றாவிட்டாலும், ராணுவ உடையில் தான் இருப்பார்கள்.
அஜிஸ் 2003ம் ஆண்டு ஏப்ரல் மாதம் அமெரிக்க ராணுவத்திடம் சரணடைந்தார். அதன்பின் அவர் கைது செய்யப்பட்டதும், பாக்தாதின் மேற்குப் பகுதியில் உள்ள காம்ப் கிராப்பர் சிறையில் அடைத்து வைக்கப்பட்டு சித்திரவதை செய்யப்பட்டதும் உலக அளவில் பரபரப்பாகப் பேசப்பட்டது.

2004ம் ஆண்டு லண்டனைச் சேர்ந்த அல்–ஹுயத் என்ற அமைப்பு அவர் பெயரில் ஒரு கடிதத்தை வெளியிட்டது. அஜிஸ் தனது குடும்பத்திற்கு அனுப்பியதாக அந்தக் கடிதம் எழுதப்பட்டிருந்தது. அதில், "சிறையில் தனக்குச் சரியான உடைகள் இல்லை. குளிர் மிகவும் வாட்டுகிறது. அதனால், கம்பளி உடைகள் வேண்டும்,'' என்று தனது குடும்பத்தாரிடம் கெஞ்சிக் கேட்பதாக இருந்தது கடிதம்.

2005ம் ஆண்டு, அஜிஸ் எழுதிய கடிதங்களைப் பொதுப் பார்வையாளர்கள் வெளியிட்டனர். உலக மக்களின் பார்வைக்காக வெளியிடப்பட்ட அந்தக் கடிதத்தில், "நாங்கள் சிறையில் மிக அதிக காலம் வைக்கப்பட்டுள்ளோம். எங்கள் குடும்பத்தினரிடம் இருந்து தனிமைப்படுத்தப்பட்டுள்ளோம். யாருடனும் தொடர்பு இல்லை. தொலைபேசி வழியாகவோ, கடிதம் மூலமாகவோ எந்தத் தொடர்பும் இல்லாமல் இருக்கிறோம். எங்கள் குடும்பத்தார் அனுப்பிய கடிதங்கள், பார்சல்கள் அனைத்தையும் எங்களுக்குக் கொடுப்பது இல்லை.

எங்களைக் கௌரவமாக நடாத்த வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். நியாயமான, நடுநிலையான விசாரணை மேற்கொள்ள வேண்டும். இறுதியாக நியாயமான தீர்ப்பும் வழங்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். அதற்காக எங்களுக்கு உதவுங்கள்,'' என்று அந்தக் கடிதத்தில் எழுதப்

பட்டிருந்தது. பாக்தாத் பல்கலைக்கழகத்தில் ஆங்கிலப் பட்டப் படிப்புப் படித்துள்ளார் அஜிஸ். வாழ்க்கையில் முதன்முதலாக ஊடகவியலாளராக தனது கடமை யைத் தொடங்கினார். 1957ம் ஆண்டு 'பாத்' கட்சியில் இணைந்தார். அதன்பிறகு, அல்-ஜமாஹிர் என்ற நாளிதழின் ஆசிரியரானார். 1960ம் ஆண்டில் பாத் கட்சி சிரியாவிலும், ஈராக்கிலும் ஆட்சியைப் பிடித்ததும், பாத் கட்சியின் பிரச்சாரப் பீரங்கியான 'அல்-தாவ்ரா' நாளிதழின் ஆசிரியர் பொறுப்பை ஏற்றார்.

பாத் கட்சியின் முதல் தலைவர் அகமது ஹசன் பாகர் தலைமையில், கட்சியின் மண்டலக் குழு உறுப்பினராக 1974ம் ஆண்டு இணைந்தார். அதன்பின் 1977ம் ஆண்டு புரட்சிகரப் பிரிவின் உறுப்பினரானார். எந்தவொரு விஷயத்தையும் மிகவும் திறமையாக விளக்கிக் கூறுவதால், 1990ம் ஆண்டு ஈராக் அதிரடியாக குவைத்தில் ஆதிக்கம் செலுத்தியதற்கு விளக்கம் அளிக்கும் உயர்ந்த பொறுப்பு வழங்கப்பட்டது.

1980ம் ஆண்டில் ஈரான் – ஈராக் போர் நடந்து கொண்டிருந்தபோது, பாக்தாத் பல்கலைக் கழகத்திற்கு அஜிஸ் சென்றிருந்தபோது அவர்மீது கையெறி குண்டுகளை வீசி கொலை செய்ய 'அல்-தவா' என்ற மதவாத அமைப்பு முயன்றது. அப்போது இந்த அமைப்பின் தலைவராக இருந்தவர் நூரி அல்-மாலிகி. அவர்தான் ஈராக்கின் தற்போதைய பிரதமர்.





1991ம் ஆண்டு அமெரிக்கா தலைமையிலான படைகள் குவைத் மீது ஆதிக்கம் செலுத்துவதற்கு சிறிது காலத்திற்கு முன், ஜெனீவாவில் நடந்த அமைதி மாநாட்டில் அஜிஸ் கலந்துகொண்டார். அமெரிக்காவின் உட்துறைச் செயலாளர் ஜேம்ஸ் பேக்கரை சந்தித்துப் பேசினார். குவைத் விடுதலைக்காக ராணுவ ஆதிக்கம் செலுத்துவதைத் தவிர்க்கும்படி கேட்டுக் கொண்டார்.

அதற்கு அடுத்ததாக, 2003ம் ஆண்டு பெப்ரவரி மாதம் உலக அளவில் மீண்டும் தலைப்புச் செய்தி ஆனார் அஜிஸ். வாடிகனிலுள்ள போப் இரண்டாம் ஜோன் போலை சந்தித்துப் பேசினார். 'சர்வதேச சமுதாயத்திற்கு முழு ஒத்துழைப்பு வழங்குவதாக,' அப்போது அவர் அறிவித்தது அமெரிக்க ஜனாதிபதி ஜோர்ஜ் டபிள்யு புஷ் தலைமையிலான அரசு ஈராக்கில் புகுந்து சதாம் அரசை விரட்டும் முயற்சிக்குச் சிறிது காலத்திற்கு முன் மிகவும்

பரபரப்பாகப் பேசப்பட்டது.

அப்போது போர் நடந்தபோது, அமெரிக்காவுடன் சேர்ந்துவிட்டார் அஜிஸ் என்றும், ஈராக்கிலுள்ள குர்திஸ்தானுக்கு தப்பிச் செல்லும்போது அமெரிக்கப் படைகளால் சுட்டுக் கொல்லப்பட்டார் என்றும் வதந்திகள் பரவலாகக் கிளம்பின. இதனையடுத்து ஊடகவியலாளர்களைச் சந்தித்து, வதந்திகள் அனைத்தும் பொய் என்று கூறினார் அஜிஸ். தான் நலமாக இருப்பதாகவும், சதாமை தனியே விட்டுவிட்டு ஓடிவிடவில்லை என்றும், ஈராக் ஜனாதிபதி தலைமையிலான அரசின் கடைசி முயற்சி வரைக்கும் தான் போராடுவதாகவும், அறிவித்தார். அப்போது அவர் கூறுகையில், 'அமெரிக்க சிறையில் சிக்கி உயிர் வாழ்வதைவிட உயிர்விடுவதே மேல்' என்றார்.

"ஈராக்கின் தலைவர்களில் ஒருவராகவும், நாட்டுக்காகப் போராடியவர் என்றும் எனது வரலாற்றைத் தெரிந்து கொண்ட நீங்கள், அமெரிக்காவின் சிறைக்குச் செல்வேன் என்று எதிர்பார்க்கிறீர்களா? அதற்குப் பதிலாக நான் செத்துப் போவேன்" என்றார். ஆனால் பின்னாட்களில் அப்படிச் செய்யவில்லை என்பது வேறுவிஷயம்.

யு.எஸ்.ஏ. டுடே பத்திரிகையின்படி, அஜிஸ் மீது புஷ் கூறும் குற்றச்சாட்டு, "பேரழிவை ஏற்படுத்தும் ஆயுதங்களைச் சதாம் வைத்துள்ளது குறித்து அஜிஸ் உண்மையைச் சொல்லவில்லை,'' என்பதே. தேடப் படும் ஈராக்கிய முக்கிய அதிகாரிகள் பட்டியலை அமெரிக்கா வெளியிட்டதில், அஜிஸ் பெயர் 25வது இடத்தில் இருந்தது.

நீதிமன்றத்தில் விசாரணைக்காக கைவிலங்கிட்டு நிறுத்தியபோதும், அவர் தனது தலைவனுக்கு நேர்மையானவராகவும், துணிச்சலோடு எதிர்த்துப் பேசுபவராகவும் இருந்தார். "நாட்டின் முதல் குடிமகன் மீது தாக்குதல் நடாத்தினால், நாட்டில் சட்டம் ஒழுங்குப் பிரச்சினை ஏற்படும். சந்தேகப்படுபவர்கள் தகுந்த ஆவணங்களுடன் சிக்கினால், அவர்களைக் கைது செய்து சிறையில் அடைக்க வேண்டும். அவர்கள் மீது தகுந்த விசாரணை நடாத்தி தண்டனை வழங்க வேண்டும் என்பது இயற்கை. எனது வாழ்க்கையில் 1980ம் ஆண்டு நடந்தது கொடூரமான செயல்.

தவா கட்சி நடாத்திய கொடூரமான நடவடிக்கையில் நான் பலிகடா ஆக்கப்பட்டேன். இப்போது அந்தக் கட்சிதான் ஆட்சியில் உள்ளது. அதனால், அவர்கள் மீது விசாரணை நடாத்துங்கள். அதன் தலைவர் இப்ராஹிம் ஜாபாரி அப்போது பிரதமராக இருந்தார். அவருக்குத் துணையாக இருந்தவர் மாலிகி, தற்போது பிரதமராக இருக்கிறார். இவர்கள் 1980ம் ஆண்டு அப்பாவி ஈராக்கியர்களைக் கொன்றனர். சதாம் என்னுடன் கடமையாற்றியவர். பல ஆண்டுகளாக எனது வழிகாட்டியாக இருந்தவர். துஜெயில் சம்பவத்திற்கும் அவருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை'' என்று உறுதியாகக் கூறினர்.

இந்தத் தகவல்களைக் கூறியபிறகு, அஜிஸ் அடைக் கப்பட்டிருந்த சிறையின் தரம் லேசாக உயர்ந்தது. சிறையில் இருந்தபடி அவர் அரேபிய சாட்டிலைட் தொலைக்காட்சியைக் காண முடியும். சிகரெட் களைப் புகைக்க முடியும். தனது குடும்பத்தார் அனுப்பிய உணவு வகைகளைச் சாப்பிட முடியும். ஒரு மாதத்தில் 30 நிமிடங்களுக்குத் தொலைபேசியில் பேசிக் கொள்ளலாம். அதனுடன் தனது குடும்பத்தினரை சிறைக்கு வரவழைத்துப் பேசிக் கொள்ளலாம்.

சௌதி தொலைக்காட்சியான அல்–அரேபியா முதன்முதலாக, "சதாம் ஆட்சிக்காலத்தில் இருந்த தாரிக் அஜிஸ் என்ற ஒரே ஒரு கிறிஸ்தவர் மட்டுமே, அப்பாவி என்று கூறி விடுதலை செய்யப் பட்டுள்ளார்'' என்றது.

இதையடுத்து இன்று ஏராளமான அரேபிய





ஊடகங்கள், "இந்த வழக்கில் மட்டுமல்ல, இனி வரும் வழக்குகளிலும் தாரிக் அஜிஸ் விடுதலை செய்யப்படுவார். ஏனெனில் அவர் ஒரு கிறிஸ்தவர். சர்வதேச சமுதாயம் என்பதில் அவர்களுக்குப் பெரிய அளவில் நம்பிக்கை உள்ளது. முன்னாள் துணைப் பிரதமருக்காக வாடிகன் நகரம் வரிந்து கட்டிக்கொண்டு செயற்படும். சதாம் தொடர்பான போர்க் குற்றங்களில் ஒரு கிறிஸ்தவர் மீது குற்றம் சுமத்தப்பட்டுவிடக்கூடாது என்பதில் அவர்கள் மிகவும் கவனமாக இருக்கின்றனர்" என்று கூறுகின்றன.

ஆனால் இந்த வாதம் முற்றுமுழுதாக உண்மையல்ல. 2003ம் ஆண்டு ஏப்ரல் மாதம் பாக்தாத் நகருக்குள் அமெரிக்கப் படைகள் நுழைந்து அதிரடித் தாக்குதல் நடாத்தியபோது, மற்றொரு கிறிஸ்தவரான மைக்கல் அப்லாக் என்பவரின் கல்லறையை உடைத்து எறிந்தது. பாத் கட்சியைத் தொடங்கியதில் அவருக்கும் முக்கியமான பங்கு உண்டு.

ஆரம்ப காலத்தில் அப்பாவி என்று அஜிசை விட்டதற்கு கிறிஸ்துவர் என்று மட்டும் காரணமல்ல. சதாம் அதிகாரத்தில் இருந்த முக்கியமானவர்களில், சதாம் போலவும், கெமிக்கல் அலி போலவும் தீய காரியங்களில் ஈடுபடவில்லை என்று அமெரிக்கா நம்பியதும் ஒரு காரணம்தான்.

சதாம் ஆட்சிக் காலத்தில் வளைகுடாப் போருக்குப் பிறகு சர்வதேச நாடுகளுக்கு அறிமுகமான தாரிக் அஜிஸ் பற்றி தெரிந்த அனைவரும், தவறான ஆட்களுக்கு நடுவே சிக்கிவிட்ட, திறமையானவர் என்றுதான் கூறினர். கொள்கை குறிக்கோளோடு வாழ்ந்தவர் அஜிஸ் என்று அவரது நண்பர்கள் பாராட்டுகின்றனர். ஈராக்கில் பாத் கட்சிக்குத் தடை விதிக்கப்பட்டபோது, 1950களில் பாத் கட்சியின் பல்வேறு நிலைகளில் அஜிஸ் துணிச்சலோடு செயற்பட்டுள்ளார்.

2002ம் ஆண்டுக்குப் பிறகு அவரது ஓய்வுக்காலம் எப்படி இருக்கும் என்று கேட்டிருந்தால், 2009ம் ஆண்டு ஓய்வு பெறுவேன் என்றும், தனது நினைவுகளைப் புத்தகமாக எழுதுவதில் தீவிரம் காட்டுவேன் என்றும் கூறியிருப்பார். அந்த அளவுக்கு அவர் ஆங்கிலத்தில் நன்கு புலமை பெற்றவர். கடந்த வாரம் தொலைக்காட்சியை அவர் பார்த்திருந்தால், அமெரிக்காவின் முன்னாள் உட்துறைச் செயலாளர் கண்டலீசா ரைஸ் தனது மலரும் நினைவுகளை மூன்று புத்தகமாக வெளியிட 2.5 மில்லியின் டொலர் தொகைக்கு கிரவுன் பதிப்பகத்துடன் ஒப்பந்தம் செய்து கொள்ளும் செய்தியை அறிந்திருப்பார்.

அஜிஸ் தனது நினைவுகளை எழுதுவதற்கு யாரும் அவருக்கு அந்த அளவுக்குப் பணம் கொடுக்க முன் வரமாட்டார்கள்.

ஆனால், அவர் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டால், பகிர்ந்து கொள்ளக்கூடிய ஏராளமான தகவல்கள் அவரிடம் பொதிந்து கிடக்கின்றன. கிட்டத்தட்ட 30 ஆண்டுகளாகச் சதாம் ஆட்சியில் நம்பர் 2 அதிகாரம் படைத்த இவர் மட்டுமே தற்போது உயிரோடு உள்ளார். அவரிடம் பல உண்மைகள் பொதிந்து இருக்கலாம். அவருக்குத் தெரிந்த ரகசியங்களை வெளி உலகத்துடன் பகிர்ந்து கொள்வதற்காகவாவது அவர் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட வேண்டும்.

இந்தியாவின் தேசப்பிதா என்றழைக்கப்படும் மகாத்மா காந்தியின் எளிமையான வாழ்க்கையைப் பறைசாற்றும் அவரது பொருட்களை, லொஸ் ஏஞ்சல்ஸ் நகரத்தைச் சேர்ந்த பிரபல திரைப்படத் தயாரிப் பாளரும், அமைதி நடவடிக்கை சமூக சேவ கருமான ஜேம்ஸ் ஓடிஸ் கடந்த 10 ஆண்டு களுக்கும் மேலாகச் சேகரித்து வந்தார்.



தனக்கு என்று எந்தச் சொத்தும் தேவையில்லை என்று கூறிக்கொண்டு எளிமையின் சின்னமாக விளங்கிய மகாத்மா காந்தியின் பொருட்கள் என்றால், அவை எப்படிப்பட்ட பொருட்களாக இருந்திருக்கும்? ஸ்டீல் பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி, ஒரு ஜோடி காலணி, ஒரு கிண்ணம், ஒரு தட்டு மற்றும் ஒரு பக்கெட் கடிகாரம். பொருட்கள் அவ்வளவுதான்.

இந்தியாவின் சுதந்திரத்திற்காக அகிம்சை வழியில் போராடியவரின் உடைமைகள், நியூயோர்க் நகரிலுள்ள ஆண்டிகுவாரம் ஏலமையத்தில் கடந்த வியாழக்கிழமை ஏலத்திற்கு வருகிறது என்றதும் சர்வதேசக் கவனத்தையும் ஈர்த்தது. மிகவும் சிறிய அளவிலான அந்த ஏலம் அந்த அறையில் பரபரப்பு ஏற்பட்டது. ஆனாலும் ஏலம் தொடங்கியபிறகு தடுக்கும் முயற்சி பலனிக்க வில்லை.

## ஆகாயத்திலிருந்து மகாத்மா காந்தி பார்த்தால் கீழே அழகான பெண்களுடன் விஜய் மல்லையா!

நடக்கும் அறையில் ஏலம் எடுக்க விரும்பிய செல்வந்தர்களும், ஒரு சில பத்திரிகையாளர்களும், ஓடிசின் சட்டத்தரணியும் இருந்தனர்.

மகாத்மா காந்தியின் பொருட்கள் இந்தியாவுக்குத்தான் சொந்தம், அந்தப் பொருள்களை ஏலம் விடக் கூடாது என்று இந்தியாவின் சார்பில் முறையிடப் பட்டது. நீதிமன்றம் வாயிலாகவும் தடை விதிக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால் அவை சரிவரவில்லை. ஏலம் தொடங்கும் நேரமும் வந்து விட்டது.

கடைசிக் கட்ட நேரத்தில் காந்தியின் பொருட்களை ஏலம்விட ஓடிசுக்கு மனம் ஒப்பவில்லை. அதனால், தனது சட்டத்தரணியை அனுப்பி ஏலம் நடப்பதைத் தடுத்து நிறுத்தும்படி கூறினார். இதனால்,

கடைசியில் 1.8 மில்லியன் டொலருக்கு அந்தப் பொருட்களை ஏலம் எடுத்தவர் இந்தியாவைச் சேர்ந்த பிரபல தொழிலதிபர் விஜய் மல்லையா. மது விலக்குக் கொள்கையை இந்தியாவில் புகுத்தப் போராடிய மகாத்மா காந்தியின் பொருட்களை வேறு நாட்டவரின் கைகளுக்குப் போய்விடாமல் அதிக பணம் கொடுத்து ஏலம் எடுத்த விஜய் மல்லையாவுக்கு, இந்தியாவிலுள்ள பட்டப்பெயர் சாராய சாம்ராட்சிய சக்கரவர்த்தி. இந்தியாவின் முன்னணி பியர் வகையான கிங்ஃபிஷர் பியர் தயாரிப்பாளர்.

இந்தியாவில் நாடாளுமன்றத்துக்கான பொதுத் தேர்தல் அடுத்த மாதம் நடைபெற உள்ள நிலையில், தேசத்தின் முன்னோடியாகக் கருதப்படும் மகாத்மா காந்தியின் பொருட்கள் ஏலம் விடப்படுவது மிகப்

பெரிய அளவில் சர்ச்சையை எழுப்பியது. அதே நேரத்தில் காந்தியின் கொள்கையைப் பின் பற்றியவர்கள், இந்த ஏல முறையைக் கடுமையாக விமர்சனம் செய்தனர். அவர்களது வாதம் என்ன வென்றால் காந்தி இதேபோன்ற தனது வாழ் நாளில் பல பொருட்களைப் பிறருக்கு இலவச மாகவே கொடுத்துள்ளார். ஓடிஸ் மேற்கொண் டுள்ள விற்பனை முயற்சி அமைதியை ஏற்படுத்தும் முயற்சி என்றாலும், அது இந்தியாவில் மிகப்பெரிய அளவில் அதிர்ச்சி அலையை ஏற்படுத்தியது.

பாரீஸ் நகரில் கடந்த மாதம் நடந்த ஏலத்தில், வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்ட சீனர், ஏலத் தொகையை கடைசியில் செலுத்த மறுத்துவிட்டார். ஏனெனில், வெண்கலத்தினால் செய்யப்பட்ட அந்த அரிய பொருள் சீனாவிலிருந்து 19ம் நூற்றாண்டில் திருடிச் செல்லப்பட்டது என்று குற்றம்சாட்டினார். காந்தியின் பொருட்கள் விஷயத்திலும் அதேபோல ஏதாவது பிரச்சினைகள் வருமோ என்று ஆராயப் பட்டது. ஆனால், காந்தியின் பொருட்கள் அவ்வாறு கடத்திச் செல்லப்படவில்லை. அவை முறையாக விலை கொடுத்துச் சேகரிக்கப்பட்டவை.

காந்தியின் பொருட்களை இந்தியாவுக்குக் கொண்டு வந்து பொதுமக்கள் பார்வைக்காக வைக்கப்படும் என்று இந்திய தொழிலதிபர் விஜய் மல்லையா உறுதி கூறினார். அதேநேரத்தில் நியூயோர்க் நகரி லுள்ள இந்தியத் தூதர் பிரபு தயாள், "காந்தியின் பொருட்களை ஏலம் விட டில்லியிலுள்ள நீதி மன்றம் தடை விதித்துள்ளது. அதனால், சட்டப் பூர்வமாக இன்னும் பல சவால்களைச் சந்திக்க வேண்டியுள்ளது'' என்றார். 'டில்லியிலுள்ள நீதி மன்றம் விதித்த தடை அமெரிக்காவில் செல்லு படியாகுமா என்பதில் குழப்பம் நிலவுகின்றது.

இந்தச் சூழ்நிலையில், மகாத்மா காந்தியின் நினைவு அறக்கட்டளையை நிர்வகித்துவரும் மகாத்மா காந்தியின் கொள்ளுப் பேரன் துசார் காந்தி மும்பையிலிருந்து தொலைபேசி மூலம், "எனக்கு மிகவும் சந்தோஷமாக இருக்கிறது. காந்தி யின் பொருட்கள் யாருக்குச் சொந்தமோ, அங் கேயே (இந்தியாவுக்கு) திரும்பி வந்துவிடும்'' என்று பேட்டியளித்திருக்கிறார்.

காந்தியின் பொருட்களை வைத்திருந்த ஓடிசிடம் டாக்டர் சீயசின் பொருட்களும் உள்ளன. இத னால், அவர் கடும் விமர்சனத்திற்கு உள்ளா னார். "ஏழைகளுக்காக ஒதுக்கப்படும் நிதியின் அளவை இந்திய அரசு கணிசமாக உயர்த் தினால், இந்தியா கேட்கிறபடி, காந்தியின் பொரு ள்களை இந்தியாவிடமே கொடுத்து விடுகிறேன்'' என்று முதலில் அறிவித்திருந்தார் ஓடிசி.

இதுகுறித்து இந்தியாவின் வெளியுறவுத்துறை இணை அமைச்சர் ஆனந்த் சர்மா புதுடில்லியில், "இது போன்ற கட்டுப்பாடுகள் இந்தியாவின் இறையாண் மையைக் கேலிக்குறியதாக்கிவிடும். இந்தக் கோரிக் கைகளை காந்தியே ஒதுக்கிவிடுவார். இவை எல்லா வற்றையும்விட, இந்தியாவின் பிரதமர் மன்மோகன் சிங் தனது சார்பாக ஒரு பிரதிநிதியை ஐ.நா.வுக்கு அனுப்பி முறையிட்டு, காந்தியின் பொருட்களைத் திரும்பப் பெறுவதற்கு வேண்டிய அனைத்து முயற்சி களையும் மேற்கொண்டுள்ளார்'' என்றார்.

கலாச்சார மற்றும் சுற்றுலாத்துறை அமைச்சர் அம்பிகா சோனி, 'சட்டப்பூர்வமாகத் தடைவிதிக்கப் பட்டிருந்தாலும், தேவைப்பட்டால், கடைசிக் கட்டத்தில் ஏலத்தில் பங்குகொண்டு காந்தியின் பொருட்களை மீட்க வேண்டும் என்ற விருப்பம் இந்திய அரசுக்கே உள்ளது'' என்றார். ஆனால் ஏலம் நடைபெற்ற நேரத்தில் இந்திய அரசு யாரையும் பணப்பெட்டியுடன் அனுப்பியிருக்க வில்லை.

கடந்த வெள்ளிக்கிழமை அமைச்சர் அம்பிகா சோனி டில்லியில், "தொழிலதிபர் விஜய் மல்லையா ஏலத்தில் பங்கு கொண்டு வெற்றிபெற இந்திய அரசு முழு உதவி செய்யும். ஆனால், இந்திய அரசு அவருக்குத் தேவையான பணத்தை கொடுத்ததா என்று கூறமுடியாது" என்றார். விஜய் மல்லையா வெற்றிகரமாக ஏலம் எடுத்தபின் அம்பிகா கூறுகையில், "மொத்தத்தில் நமது தேசப்பிதா மகாத்மா காந்தி விட்டுச் சென்ற பொருட்களை நாம் வெற்றிகரமாக மீட்டுவிட்டோம்,'' என்றார்.






கடந்த வியாழக்கிழமை காலையில், நியூயோர்க் நகரி லுள்ள ஆண்டிகுவாரம் ஏல மையத்தின் ஐந்தாவது மாடியில் உள்ள அறையில் இந்தியாவைச் சேர்ந்த வர்களும், தொழிலதிபர்களும், ஏலம் எடுக்க விரும்பியவர்களும் கூடி இருந்தனர். அந்த அறை யில் கடிகாரங்கள் மட்டும் சிறப்பாக இருந்தது. அங்கு கண்ணாடிக்குள் காந்தியின் ஐந்து பொருள் களும் காட்சிக்கு வைக்கப்பட்டு இருந்தன. அதன் மீது மஞ்சள் நிறமாக மாறிப் போயிருந்த ஒரு நாளி தழும் இருந்தது. அது 1948ம் ஆண்டு ஜனவரி 30ம் திகதி வெளியான ஓஹியோ செய்தித்தாளான 'த பிகுவா டெய்லி கால்' அந்த செய்தித் தாளின் முதல் பக்கத் தலைப்புச் செய்தி: "காந்தி இன்று சுட்டுக் கொல்லப்பட்டார்!"

72 வயதான பொறியாளரும், ரியல் எஸ்டேட் முதலீட்டு நிபுணருமான ஹிமாத்ரி ராய் என்பவர் இந்த ஏலம் குறித்து கேள்விப்பட்டதும், கனடா விலுள்ள மொன்ட்ரியல் நகரிலிருந்து வந்து கலந்து கொண்டார். கண்களில் கண்ணீர் வடிய, காந்தியின் பொருட்களைக் கூர்ந்து கவனித்தார். பின்னர், தனக்கு 10 வயதாக இருக்கும்போது இந்தியாவில் காந்தியுடன் சந்தித்துப் பேசியதை நினைவு கூர்ந்தார்.

ஏலம் நடந்த வரலாற்றிலேயே முதல்முறையாக, ஏலத்தில் கலந்துகொண்டவர்கள் தங்களது வங்கி நிதி கணக்குகளை ஆதாரமாகக் காட்ட வேண்டும் என்று கூறப்பட்டது. "கடந்த மாதம் பாரீஸ் நகரில் நடந்த ஏலத்தில் கிறிஸ்டீ என்பவர் ஏலம் எடுத்து விட்டு தொகையைச் செலுத்தப் பணமில்லை என்று கூறிவிட்டுச் சென்றார். அதுபோல எதுவும் நடக்கக் கூடாது என்பதற்காக, தற்போது முன்னெச்சரிக் கையுடன் செயற்படுகிறோம். இங்கு ஏலம் எடுக்க வந்துள்ள சாந்த் சிங் சாத்வால் போன்றவர்களால் எந்தப் பாதிப்புமில்லை. ஏனெனில் அவர்களுக்கு உலகம் முழுவதிலும் பல ஹோட்டல்களும், உணவு விடுதிகளும் உள்ளன. ஆனால், மற்றவர்களின் நிலை மையைக் கொஞ்சம் யோசித்துப் பார்க்க வேண்டும்'' என்று ஏலம் நடத்தும் அதிகாரி கூறினார்.

ஏற்கனவே அறிவித்தபடி ஏலம் தொடங்கியது. மதியம் 2.30 மணி அளவில் ஓடிசின் சட்டத்தரணி ரவி பத்ரா அந்த ஏல அறைக்குள் வந்து, ஏலத்தைத் தடுத்து நிறுத்த முயன்றார். அதனால், ஏலம் நடப் பது சிறிது நேரம் தடைப்பட்டது. அப்போது, ஏல மையத்தின் செயல் அதிகாரி ஜூலியன் சாரெர் தலையிட்டு, "காந்தியின் ஐந்து பொருட்களை ஏலம் விடுவதற்கு ஓடிஸ் எங்களுடன் சட்டப்பூர்வமாக ஒப் பந்தம் செய்து கொண்டுள்ளார்'' என்றார்.

இதையடுத்து, சட்டத்தரணி பத்ராவை, ஏல மைய அதிகாரிகள் பத்திரமாக அங்கிருந்து வெளியே கூட்டிக் கொண்டு சென்றனர். பின்னர் பத்ரா கூறு கையில், "தொழிலதிபர் விஜய் மல்லையா, காந்தியின் பொருட்களை இந்திய அரசிடம் ஒப்படைக்க விருப்பம் தெரிவித்து இருந்தால், ஏலம் நடைபெறு வதை ஓடிஸ் தடுத்து நிறுத்த திட்டமிட்டிருக்க மாட்டார்" என்றார்.

அந்த ஏலம் நடைபெறும் அறையில், ஏலம் எண் 364 அறிவிக்கப்பட்டதும், அங்கிருந்த மெகா திரையில் காந்தியின் பொருட்கள் அனைத்தும் பிரமாண்டமாகக் காண்பிக்கப்பட்டன. பின்னணியில் மிகவும் மெல்லியதாக பியானோ இசை ஒலிக்கப்பட்டது. மொத்தம் 60 ஏலதாரர்கள் பதிவு செய்திருந்தனர். அந்த அறையில் ஒரு டசின் பேர் மட்டுமே கூடி இருந்தனர்.

ஆரம்பத்தில் காந்தியின் பொருட்கள் 10 ஆயிரம் டொலருக்கு மதிப்பிடப்பட்டது. அதன்பின், இணையத்தளம், தொலைபேசி வாயிலாக கடகட வென மதிப்பு கூடிக்கொண்டே போனது. 20 ஆயிரம் டொலர், 50 ஆயிரம் டொலர், ஒரு லட்சம் டொலர் என்று அதிகரித்தது. ஏலம் ஆரம்பித்த இரண்டு நிமிடத்திலேயே ஏலத் தொகை ஒரு மில்லியன் டொலராக உயர்ந்தது. இந்த மதிப்பு வந்ததும் ஏலம் எடுப்பதில் ஏலம் கூறுபவர்களின் எண்ணிக்கை குறைந்தது. இரண்டு பேர் மட்டுமே களத்தில் ஏலம் கூவினர்.

விஜய் மல்லையாவின் பிரதிநிதி டோனி பேடியும், முன்னாள் இந்திய கிரிக்கெட் வீரர் திலீப் தோஷியின் பிரதிநிதியாகக் கூறிய குயெர்சன்ஸ் ஏல மையத்தின் தலைவர் ஆர்லன் எட்டிங்கரும் போட்டியிட்டனர். காந்தியின் பொருட்களை ஏலத்தில் எடுத்து இந்திய அரசிடம் ஒப்படைக்கப் போவதாக திலீப் தோஷி ஏற்கனவே கூறி இருந்தார். ஏலம் எடுக்கும் தொகை உயர்ந்து கொண்டே போனது. கடைசியில் 1.8 மில்லியன் டொலருக்கு டோனி கேட்கும் வரை ஏலத் தொகை உயர்ந்து கொண்டே போனது.

இந்தத் தொகையைக் கேட்டதும் அந்த அறையில் இருந்தவர்கள் அனைவரும் கையைத் தட்டி ஆரவாரம் செய்தனர். "இந்தியாவின் பாரம்பரியத்தை மீட்டு இந்தியாவிற்கே திரும்பக் கொண்டு வந்துள்ளார் தொழிலதிபர் மல்லையா,'' என்றார் டோனி பேடி.

அந்த ஏலம் மையத்தின் செயல் அதிகாரி மாரோன், "காந்தியின் பொருட்கள் இந்தியாவிற்குக் கொண்டு செல்லப்பட்டு மக்களின் பார்வைக்காக வைக்கப்படும். இந்த ஏலத்தின் முடிவு இதுவாக இருக்கும் என்று நாங்கள் நம்புகிறோம்'' என்றார்.

தனது பொருட்களை ஏலம் எடுத்திருக்கும் விஜய் மல்லையா குறித்து மோகன்தாஸ் கே காந்தி என்ன நினைப்பார்?

விஜய் மல்லையாவுக்குச் சொந்தமாக தற்போது விமானப் போக்குவரத்து நிறுவனம் உள்ளது என்ற போதிலும், மதுபானங்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலையையும் வெற்றிகரமாக நடாத்தி வருகிறார். ஏலம் எடுக்கப்பட்ட நேரத்தில் விஜய் மல்லையா வியாபார விஷயமாக பிரான்ஸ் சென்றிருந்தார்.

"மகாத்மா காந்தி இந்தியாவின் தேசப்பிதா என்று அழைக்கப்படுபவர். அதனால் அவரிடமிருந்த பொருட்கள் அனைத்தும் கலாச்சார மற்றும் வரலாற்றுப் பொக்கிஷங்களாகக் கருதப்படும். அவற்றைவிட வேறு ஒன்றும் மிக முக்கியமானதாகக் கருதப்படமாட்டாது'' என்று பிரான்ஸிலிருந்தபடி தொலைபேசியில் கூறினார் விஜய் மல்லையா.

பல்வேறு வகையான நிறுவனங்களை நடாத்திவரும் விஜய் மல்லையா, மது அருந்தாமை... புலால் உண்ணாமை என்று வலியுறுத்தும் தேசப்பிதாவின் உடைமைகளை அதிக விலை கொடுத்து ஏலத்தில் எடுப்பதில் முதலில் தயக்கம் காட்டினார் என்று தெரிகிறது. எப்போதும் ஊதாரித்தனமான நாகரிகம், இறக்குமதி செய்யப்பட்ட சிகரெட், உயரமான பெண்கள் துணையுடன், ஓல்ட் ஸ்காட்ச் அருந்தும் செல்வச் சீமான் என்று தன்னைத்தானே பறைசாற்றிக் கொள்வதில் விரும்பமுள்ளவர் விஜய் மல்லையா.

அவரது நிறுவனமான கிங்பிஷர்ஸ் பியர் நிறுவனம் ஒவ்வொரு ஆண்டும் காலண்டர் வெளியிடும். அதில், நீச்சலுடையில் அழகிகள் அலங்கரிப்பார்கள். பென்ஸ், ஜாகுவார் போன்ற வாகனங்களையே விரும்பி வாங்கிக் கொள்வார். Formula One போட்டி வீரர்களை தனக்குச் சொந்தமாக வாங்கிக் கொள்வார். தனது தந்தையிடமிருந்து பெற்ற நிறுவனத்தை, புத்திசாலித்தனமான மார்க்கெட்டிங் திறமையாலும், துணிச்சலான ஒப்பந்தங்களாலும் வளர்த்துள்ளார்.

விஜய் மல்லையா தனது சமீபத்திய சேகரிப்புகளாக தனது பொருட்களை பெற்றதை மகாத்மா காந்தி ஒருபோதும் சகித்துக் கொள்ளமாட்டார் என்று கூறுகின்றனர் விமர்சகர்கள். "மகாத்மா காந்தி தனது வாழ்நாள் முழுவதும் மது அருந்தாமைக்காகப் போராடினார். தற்போது மதுபானங்களை உற்பத்தி செய்யும் தொழிலதிபரா தனது பொருட்களை வாங்கினார் என்று ஆகாயத்தில் இருந்து இதனை எல்லாம் பார்த்தால், காந்தி தற்கொலையே செய்து கொள்வார்'' என்கிறார் இந்தியாவில் ஏழைகளின் உரிமைக்காகக் குரல் கொடுக்கும் எழுத்தாளர் சந்திரபான் பிரசாத்.

அத்துடன் விஜய் மல்லையா ஒரு அதிரடியான



வியாபாரி. யு.பி. குழு நிறுவனத்தில் நல்ல லாபம் கொடுக்கும் யுனைட்டெட் ஸ்பிரிட்ஸ் நிறுவனத்தின் பங்குகளை விற்க விஜய் மல்லையா முடிவு செய்துள்ளது, அந்நிறுவனத்தில் முதலீடு செய்துள்ளவர்களிடையே அச்சத்தை ஏற்படுத்தியுள்ளது. இந்தியப் பங்குச்சந்தையில் 2008ம் ஆண்டு ஜனவரிக்குப் பிறகு 73 சதவீதம் விலை குறைந்துள்ளதால் முதலீட்டாளர்கள் அச்சமடைந்துள்ளனர்.

மல்லையாவின் மொத்த சொத்து 390 மில்லியன் டொலர் என்று போர்ப்ஸ் சஞ்சிகை கடந்த ஆண்டு பட்டியலிட்டது. விமானங்கள், பாரம்பரியத்தைப் பறைசாற்றும் சின்னங்கள் மற்றும் பொருட்களை வாங்குவதுடன், இன்றைய நவீன ஓவியங்களையும் விஜய் மல்லையா விரும்பி வாங்குகிறார். மைசூரை ஆண்ட இஸ்லாமிய மன்னர் சுல்தான பதே அலி திப்புவின் வாள் கடந்த 2003ம் ஆண்டு லண்டனில் ஏலம் விடப்பட்டது. அதனை வாங்கினார். அப்போது அவர் கூறுகையில் இந்தியாவின் பாரம்பரியப் பொருட்களை நாம் மீட்டு இந்தியாவிற்கு கொண்டு வர வேண்டும் என்றார்.

“விஜய் மல்லையா மிகவும் மதிக்கத்தக்க ஒரு சிறந்த தொழிலதிபர். சட்டபூர்வமாக அவர் தொழில் செய்கிறார். கள்ளச்சாராயம் விற்கவில்லையே. இந்தியாவின் பாரம்பரியத்தை மீட்கும் முயற்சியில் நடந்து கொண்டார். வெளிநாட்டைச் சேர்ந்த யாராவது இதனை வாங்கி இருந்தால், அது இந்தியாவிற்கு மிகப்பெரிய அடியாக இருக்கும்'' என்று புகழ்கிறார் மகாத்மா காந்தியின் கொள்ளுப்பேரன் துசார் காந்தி.

“இன்று என்னால் என்ன செய்ய முடியுமோ அதனை இந்தியாவுக்காகச் செய்கிறேன். எனக்குப் பிடித்த வாழ்க்கையை நான் வாழ்கிறேன். எனக்குப் பிடித்த வாழ்க்கையில், ஆடம்பரக் கார்கள், அருமையான மது, அழகான பெண்கள் எல்லாமே இருக்கின்றன.

மற்றவர்கள் வாழும் முறையைப் பற்றி நான் விமர்சனம் செய்ய விரும்புவதில்லை'' என்கிறார் விஜய் மல்லையா.

இந்தியாவில் ஏற்படும் மாற்றங்கள் குறித்து விமர்சனங்களோடு எழுதும் எழுத்தாளர் குருசரண் தாஸ், “காந்தி மிகவும் பொறுமைசாலி.

தன்னிடமுள்ள நண்பர்களிடம் ஒவ்வொருத்தருக்கும் என்று தனித் தனி அங்கீகாரம் அளித்திருந்தார். விஜய் மல்லையா வின் ஆடம்பர வாழ்க்கை மகாத்மா காந்திக்குப் பிடிக்காமல் போயிருக்கும். ஆனால், விஜய் மல்லையாவின் தொழில் திறமையைக் கண்டு பூரித்துப் போயிருப்பார்'' என்றார்.

# அரசு இயக்கத்திடம் ஒப்படைக்க இணங்கிய பிரதேசம்!

பாகிஸ்தானில் உள்ள ஸ்வாட் பள்ளத்தாக்கில் போர் நிறுத்தம் செய்து கொள்வதாக தீவிரவாதிகளும் பாகிஸ்தான் ராணுவமும் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளன. பாகிஸ்தானின் மிகப்பிரபலமான சுற்றுலா நகராகக் கருதப்பட்ட இந்த ஸ்வாட் பள்ளத்தாக்கில், போர் நிறுத்தம் மேற்கொள்ளப்பட்டாலும், அமைதி இன்றுவரை ஏற்படவில்லை.

இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு தலிபான்கள் தங்களது அடக்குமுறை மதவெறி ஆட்சியை நடாத்தி வருகின்றனர். அமைதி ஒப்பந்தம் கையெழுத்தான சில நாட்களில், அமைதி நிலவுகிறது என்று அரசு உறுதி அளித்தபிறகு, தலிபான் எதிர்ப்பு அமைப்பைச் சேர்ந்த ஒரு முக்கியமானவரின் குடும்ப உறுப்பினர் ஸ்வாட் கிராமத்திற்குத் திரும்பினார். அவரை தலிபான்கள் கடத்திச் சென்று, கொடுமைப்படுத்தி, கொலை செய்தனர்.

அதன்பிறகு, தலிபான் தீவிரவாதிகள் வீதித் தடைகளைப் போட்டு, பாதைகளை மறித்து அடைத்து வைத்தனர். கொலை செய்யப்பட்டவரின் இறுதிச் சடங்கில் அவரது உறவினர்கள் யாராவது கலந்து கொள்கின்றனரா என்று ஒவ்வொரு காரையும் தேடினர். அதனால் யாரும் இறந்தவரின் இறுதிச் சடங்கில் கலந்துகொள்ளவில்லை.

கடந்த வாரத்தில் பாகிஸ்தான் ராணுவத்தைச் சேர்ந்த இரண்டு ராணுவத்தினர், குடிநீர் லொறிக்குப் பாதுகாப்பாகச் சென்றபோது, அவர்களை தலிபான்கள் சுட்டுக் கொன்றனர். பாகிஸ்தான் ராணுவத்துடன் யுத்த நிறுத்தம் நடைமுறையில் இருக்கும்போது கொன்றது எதற்காக என்று கேட்டபோது, ராணுவத்தினர் இருவரும் வருவதாக முன்கூட்டியே தங்களுக்குத் தகவல் தெரிவிக்காததால் அவர்களை சுட்டுக் கொன்றதாகக் கூறினர்.

கடந்த புதன்கிழமை, மாகாண அரசும், உள்ளூர் தலிபான் அமைப்புத் தலைவரும் ஒப்பந்தத்தில்



கையெழுத்திட்டனர். அந்த ஒப்பந்தத்தின்படி, இஸ்லாமியச் சட்டத்தை அமல்படுத்துவது, புதிய கட்டுப்பாடுகளை அமல்படுத்தும் மையத்தை ஏற்படுத்துவது, இசைக்கு தடை விதிப்பது, தொழுகை நடக்கும் நேரங்களில் கடைகளை அடைப்பது, இஸ்லாமிய மதத்திற்கு எதிரான நடவடிக்கைகளில் ஈடுபடுவோரைப் பற்றிய புகார்களை எழுதிப் போடுவதற்காக புகார் பெட்டிகள் வைப்பது ஆகிய விதிமுறைகள் நடைமுறைப்படுத்தப்படும்.

தலிபான்கள் இந்தப் பகுதிகளில் பெண்கள் பாடசாலைகளைத் திறக்க அனுமதிப்பார்களா என்று உள்ளூர் மக்கள் சந்தேகத்துடன் உள்ளனர். இதற்குமுன், பாகிஸ்தானின் சுயாட்சி அதிகாரம் பெற்ற பழங்குடியினப் பகுதிகளாக இருந்த இந்தப் பகுதிகள், தற்போது தீவிரவாதிகளுடன் செய்து கொண்ட ஒப்பந்தம் காரணமாக ஒரு குட்டி நாடு போலவும், அல்–காய்தா மற்றும் பாகிஸ்தான் தீவிரவாதிகளுக்கு அடைக்கலம் கொடுக்கும் பகுதியாகவும் திகழ்கிறது.

இதுகுறித்து பாகிஸ்தான் அரசு, “ஸ்வாட் பள்ளத்தாக்கில் போர் நிறுத்தம் செய்து கொண்டதன் காரணமாக, பாகிஸ்தான் ராணுவம் பாதிப்பிலிருந்து தப்பிக்கிறது. அப்பாவிப் பொதுமக்கள் பாதிக்கப்படுவது தடுக்கப்படுகிறது. உள்ளூர் நீதிமன்றம் மீது மக்கள் வைத்துள்ள அவநம்பிக்கை தடுக்கப்படுகிறது'' என்று கூறுகிறது.

இந்தப் பகுதிகளில் தலிபான்களில் அடக்குமுறை மற்றும் கட்டாய ஆட்சேர்ப்பு காரணமாக கடந்த ஆறு மாதங்களில் ஆயிரக்கணக்கான மக்கள் இங்கிருந்து தப்பிச் சென்று அகதிகள் முகாம்களில் தங்கி உள்ளனர். அண்டை மாவட்டங்களில் உள்ள உறவினர்கள் வீட்டில் தஞ்சமடைந்துள்ளனர்.



வீட்டுக்கு ஒருவரைப் போராட அனுப்பவேண்டும் என்று தலிபான் அமைப்பு பிடித்துச் சென்றதால், இளவயதினர் இருக்கும் குடும்பங்கள் பல இந்தப் பகுதிகளில் இருந்து ஏற்கனவே தப்பிச் சென்றிருந்தது.

தற்போது ஏற்பட்டுள்ள போர் நிறுத்தம் காரணமாக, சொந்த கிராமத்திற்குச் சென்றால் என்னென்ன தண்டனைகளைச் சந்திக்க நேரிடுமோ என்ற பயத்தில் உள்ளனர் பல குடும்பங்கள். வடமேற்கு எல்லை மாகாணத்தின் தலைநகரான பெஷாவர், ஸ்வாட் பகுதிகளில் உள்ள சட்டத்தரணி ஷெர் முகம்மட், “தீவிரவாதிகள் தங்களது ஆயுதங்களை ஒப்படைக்கவில்லை. உங்களிடம் ஒருமுறை அதிகாரம், ஒப்படைக்கப்பட்டால், அதன்பிறகு, தீவிரவாத அமைப்புகள் தங்கள் இஷ்டப்படி செயற்படுவதை ஒரு காலத்திலும், யாராலும் தடுக்க முடியாது. அப்படியான பகுதிகளில் ஒருகாலத்தில் சட்டம் ஒழுங்கை நிலைநாட்டவேண்டும் என்றால், அந்தத் தீவிரவாத அமைப்பையே முற்றிலும் அழித்தால்தான் முடியும்” என்றார்.

பெப்ரவரி 16ம் திகதி மிகவும் வயதான இஸ்லாமியத் தலைவரான மௌலானா சுபி முகம்மட்டுடன் பாகிஸ்தான் அரசு போர் நிறுத்தம் ஒப்பந்தம் செய்து கொண்டது. அதன்படி, பனி போர்த்திய ஸ்வாட் பள்ளத்தாக்கின் 70 சதவீத மலைப்பகுதியையும், விளை நிலங்களையும் தலிபான் தீவிரவாதிகளிடம் ஒப்படைப்பது என்றும் முடிவு செய்யப்பட்டது.

இதுகுறித்து பாகிஸ்தான் அரசோ, “எளிதாகச் சந்திக்கக்கூடிய தீவிரவாதிகளான முகம்மட் போன்றவர்களையும், தீவிரவாதத்தில் அதி தீவிரமாகச் செயற்படும் அவரது மருமகன் மௌலானா பைஸ்லுல்லா போன்றவர்களையும் பிரிக்கும் முயற்சியே இந்த போர் நிறுத்த ஒப்பந்தம்” என்கிறது. பாகிஸ்தான் தலிபான் குழுக்கள் மற்றும் அல்–காய்தா தீவிரவாதிகளின் ஆதரவோடு ஏராளமான பணத்தோடும், ஆயுதங்களோடும் தாக்குதல் நடத்தும் பைஸ்லுல்லா போன்றவர்கள் கடந்த ஆண்டுகளில் பாகிஸ்தான் ராணுவத்தின் மீது பயங்கரமாகத் தாக்குதல் நடாத்தியிருக்கின்றனர்.

இந்த ஒப்பந்தம் குறித்து விமர்சகர்கள், “மிகவும் அமைதியாக இருந்த ஸ்வாட் பள்ளத்தாக்கைத் தலிபான்களிடம் தூக்கிக் கொடுத்துவிட்டது பாகிஸ்தான் அரசு,'' என்கின்றனர்.

கடந்த ஆண்டு இமாம் தேரி என்னுமிடத்தில் மதரசா இருந்த இடத்தில் பைஸ்லுல்லா நடாத்திய எப்.எம். வானொலி நிலையத்துக்குள் அதிரடியாக நுழைந்த பாகிஸ்தான் ராணுவம் அந்த வானொலி



நிலையத்தைஆக்கிரமித்துக் கொண்டது. அந்த இடத்திலிருந்து ராணுவத்தைத் திரும்ப அழைத்துக் கொள்வது என்றும் இந்த ஒப்பந்தத்தில் உறுதி செய்யப்பட்டுள்ளது.

கடந்த வியாழக்கிழமை மொகம்மட்டின் பிரதிநிதி மௌலானா இசாத் கான், "இஸ்லாமிய மதச் சட்டங்களுக்கான ஷரியத் நீதிமன்றங்களுக்கு நீதிபதிகள் விரைவில் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். வரும் மார்ச் 15ம் திகதி முதல் ஷரியத் நீதிமன்றங்கள் செயற்படத் தொடங்கும்,'' என்றார். மாகாண அரசு, "விரைவான நீதி கிடைக்கும் வகையில் இஸ்லாமியச் சட்டம் செயற்படும். ஆனால் அதே நேரத்தில் கையை வெட்டுதல் கற்களால் அடித்துக் கொல்லுதல் போன்ற கொடூரமான தண்டனைகள் வழங்கப்படமாட்டாது'' என்றது.

பெண்கள் கல்வி குறித்து அந்த ஒப்பந்தத்தில் எதுவும் குறிப்பிடவில்லை. கடந்த ஆண்டில் மட்டும் நூற்றுக்கணக்கான பெண்கள் பாடசாலைகளை தீவிரவாதிகள் தீ வைத்துக் கொளுத்தினர். மாண விகளையும் அவர்களது வீட்டுக்கு விரட்டி அடித்தனர். வடமேற்கு எல்லை மாகாண முதல்வர் அமீர் ஹெய்தர் ஹோடி, ஸ்வாட் பள்ளத்தாக்கிற்கு கடந்த வாரம் சென்றபோது, "ஸ்வாட் பள்ளத் தாக்கில் பெண்கள் பாடசாலை விரைவில் திறக்கப்படும்,'' என்றார்.

ஆனால், மாகாண அரசு பண வசதி இல்லாமல் திணறி வருகிறது. அதனால், ஸ்வாட் பள்ளத்தாக்கில் தீவைத்துக் கொளுத்தப்பட்ட பெண்கள் பாடசாலை மீண்டும் சீர் செய்யப்படுமா என்ற சந்தேகம் எழுந்துள்ளது. ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த நன்கொடையாளர்கள், ஸ்வாட் பள்ளத்தாக்கின் மேம்பாட்டுக்காக நிதியுதவி செய்வதற்குத் தயாராக உள்ளனர். அதே நேரத்தில், அந்தப் பகுதி தீவிரவாத அமைப்பாக முத்திரை குத்தப்பட்ட தலிபான்கள் கட்டுப்பாட்டில் இருப்பதால் நிதியுதவி செய்வதற்கு அந்நாடுகள் தயக்கம் காட்டுகின்றன.

"அமைதி ஒப்பந்தம் செய்து கொண்டாலும், தலிபான்களின் கொடூர அடக்குமுறையின் காரண மாக கிராம மக்கள் பயந்து போய் உள்ளனர். பாகிஸ்தான் ராணுவத்திற்கும், அரசுக்கும் ஆதரவு தெரிவித்துச் செயற்படுபவர்களைத் தலிபான்கள் தேடிப்பிடித்து கொலை செய்கின்றனர். எனது உறவினர் ரகமது அலி, தனது மலைக் கிராமமான மந்தல் என்னுமிடத்திலிருந்து திரும்பி வரும்போது தலிபான்களால் கடத்திச் செல்லப்பட்டு, ஐந்து நாட்கள் கொடுமைப்படுத்தப்பட்டுக் கொல்லப்பட் டுள்ளார். பெப்ரவரி 25ம் திகதி அலியின் உடல் மலையடிவாரத்தில் வீசப்பட்டுக் கிடந்தது. அவரது முதுகுப்பகுதி முழுவதும் தோல் இல்லவே இல்லை. அந்த அளவுக்குக் கொடுமைப்படுத்தியுள்ளனர்.



தலிபான்களைப் பற்றி அரசு கூறும் வாக்குறுதியை நம்ப வேண்டாம். தலிபான்கள் எதுவும் செய்ய மாட்டார்கள் என்று நம்பி சொந்தக் கிராமத்திற்குச் செல்லக்கூடாது என்று எவ்வளவோ எடுத்துக் கூறினோம். ஆனால், அலி கேட்கவே இல்லை.

அலியின் ஒன்றுவிட்ட சகோதரர் பிர் சமியுல்லா ஒரு நியாயமான மதவாதத் தலைவர். தலிபான் களுக்கு எதிராகச் செயற்பட்டார். தனது ஆதர வாளர்களுடன் ஒன்று சேர்ந்து பல நூறு தலிபான் தீவிரவாதிகளை சுட்டுக் கொன்றார். அவரைப் பழிவாங்கும் நோக்கத்தோடு இவரைக் கொடூரமாகக் கொலை செய்துள்ளனர்.

இவற்றை எல்லாம் பார்க்கும்போது, நான் எனது போக்குவரத்துத் தொழிலை இங்கு நிரந்தரமாக மூடிவிட வேண்டும் என்று நினைக்கிறேன். எனது கார்களையும் விற்றுவிட நினைக்கிறேன். கிராமத்தில் உள்ள ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் தமது தீவிரவாத இயக்கத்துக்கு ஒருவரை விட்டுக்கொடுக்க வேண்டும் என்று தலிபான்கள் எச்சரிக்கை விடுத்துள்ளனர். தலிபான்களுடன் ஒப்பிடும்போது அரசு அதிகாரிகள் எந்த அதிகாரமும் இல்லாமல் உள்ளனர். அதனால் பலரும் பெஷாவருக்கு தப்பிச் சென்றுவிடுகின்றனர்'' என்றார் தனியார் நிதி நிறுவன அதிகாரி மொகம்மது அமாத்.

சில அதிகாரிகள் தங்களது செல்வாக்கைப் பயன் படுத்தி இஸ்லாமாபாத்துக்கு மாறுதல் வாங்கிக் கொண்டு சென்றுவிடுகின்றனர். ஒப்பந்தம் செய்து கொள்வதற்காகவும், ஸ்வாட் பள்ளத்தாக்கில் ஒற்றுமையாகப் பேசுவதற்கும் சென்ற பலரும் தலிபான்களால் கடத்திச் செல்லபட்டுள்ளனர். மாவட்ட ஒருங்கிணைப்பு அதிகாரி குஷால் கான் என்பவர் தீவிரவாதிகளுடன் பேச்சுவார்த்தை நடாத்துவதற்காக கடந்த வாரம் வந்தார். அப்போது அவரை, அவரது உதவியாளர்களே கடத்திச் சென்றனர். பின்னர் தலிபான்களுடன் பேச்சுக்களை நடத்தி தலிபான் இயக்கத்தின் செயற்பாடுகளுக்காக குறிப்பிட்டளவு நிதி கொடுத்த பின்னரே அவர்களால் விடுதலை செய்யப்பட்டார்.

சில இடங்களில் புதிய பயிற்சி முகாம்களை தலிபான்கள் அமைத்துள்ளனர் என்று கிராம மக்கள் கூறுகின்றனர். மண்டல் என்னுமிடத்தின் அருகே உள்ள ஒரு வீட்டிலிருந்து தொலைபேசி மூலம் ஒருவர், "மலைப்பகுதியிலுள்ள பாடசாலைகளை தீவிரவாதிகள் தங்களது பயிற்சி மையங்களாக நடாத்தி வருகின்றனர். பாடசாலை வாளாகத்தில் அவிழ்த்து விடப்பட்ட நாய்களைக் குறி பார்த்துச் சுடும் பயிற்சிகளை இளம் சிறுவர்களுக்கு வழங்குகின்றனர்'' என்றார்.

ஸ்வாட் பள்ளத்தாக்கின் முக்கியமான வர்த்தக நகரமான மிங்கோரா என்னுமிடத்தைச் சேர்ந்த வியாபாரி அத்னான் கான், "எப்.எம். வானொலியில் தீவிரவாதத்தை ஊக்குவிக்கும் வகையில் பஸ்லுல்லா பேசுகிறார். தலை துண்டிக்கப்பட்டு கொலை செய்யப்பட்டவர்களின் பட்டியலை இரவு நேரங்களில் வாசிப்பதுண்டு. தற்போது போர் நிறுத்தம் செய்யப்பட்டுள்ளதால், எப்.எம். வானொலியின் தாக்கத்தில் சுருதி குறைந்துள்ளது. பாகிஸ்தான் அரசையும், ராணுவத்தையும் வெளிப்படையாகப் பழித்துரைக்கும் போக்கிலும் சுருதி குறைந்துள்ளது.

தலிபான்கள் மிகவும் கட்டுப்பாட்டோடு இருக்கிறார்கள் என்பதைவிட, கிராமங்களில் நடக்கும் கொடூர தண்டணைகள், மற்றும் கட்டாய ஆட்சேர்ப்பு, சிறுவர்களுக்கு ஆயுதப் பயிற்சி கொடுப்பது, ஆகியவை வெளியே தெரிந்தவிடாமல் இருப்பதில் மிகக் கவனமாகவே இருக்கிறார்கள்'' என்றார்.



விமானப் போக்குவரத்துத் தலைவர் பதவியை திரான் அலெஸ் ராஜினாமா செய்தார். அதே நாளில் ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சியின் நிர்வாகக் குழுக் கூட்டத்தைக் கூட்டிய மஹிந்த ராஜபக்ஷ, கூட்டத்தில் சமரவீர, சூரியராச்சி, அலெஸ் மற்றும் மவ்பிம செய்தித்தாளைக் கடுமையாக விமர்சித்தார். மவ்பிம செய்தித்தாளின் பிரதி ஒன்றை தனது கையில் வைத்திருந்த அவர், "விமான நிலையங்களின் தலைவர் அச்சிடும் செய்தித்தாள் நமது அரசை விமர்சனம் செய்கிறது'' என்றார். அவர் கூறிய இந்தக் கருத்தை நாட்டில் உள்ள அனைத்து ஊடகங்களும் முக்கியத்துவம் கொடுத்து வெளியிட்டன.

இதன் பின்னரும் தொல்லைகள் தொடர்ந்தன. ஜனாதிபதியின் சகோதரர்கள் பசில் மற்றும் கோத்தபாய ராஜபக்ஷக்களுக்கு எதிரான செய்திகளை வெளியிட்டால் கொலை செய்யப்படுவீர்கள் என்று ஸ்டாண்டர்ட் செய்தித்தாள்களின் ஆசிரியர் குழு இயக்குனருக்கு 2007ம் ஆண்டு பெப்ரவரி 18ம் திகதி கொலை மிரட்டல் விடுக்கப்பட்டது. இது தொடர்பாக ஆசிரியர் குழு இயக்குனர் அதே நாளில் வெலிக்கடை காவல் நிலையத்தில் புகார் கொடுத்தார். ஆனால், இதுவரை இந்தப் புகார் மீது எந்தவித விசாரணையும் நடத்தப்படவில்லை.

அலெஸ் மற்றும் சி.பி.இ. நிதி இயக்குனர் துஷ்யந்த பாஸ்நாயக ஆகியோர் நாட்டை விட்டு வெளியேறவில்லை என்பதை உறுதி செய்து கொள்ளுமாறு குடிபெயர்வு அதிகாரிகள் மற்றும் தேசிய உளவுப் பிரிவு (என்.ஐ.பி) பொலிசாருக்கு உத்தரவிடப்பட்டதன் மூலம், அவர்கள் வெளிநாடு செல்வதைத் தடை செய்யும் நடவடிக்கையில் அரசு இறங்கியுள்ளது என்பது பெப்ரவரி 22ம் திகதி தெரிய வந்தது. இதன் பின்னர், விடுதலைப்புலிகளுக்கு சி.பி.இ. நிறுவனம் நிதி வழங்கியதாக குற்றம் சுமத்தி, பாஸ்நாயக்கவை டி.ஐ.டி. பொலிசார் 2007ம் ஆண்டு பெப்ரவரி 26ம் திகதி கைது செய்தனர். 71 நாட்கள் அவர் பிடித்து வைக்கப்பட்டிருந்தார்.

அந்தக் காலக்கட்டத்தில் அவர் மனிதத்தன்மையற்ற வகையில் நடாத்தப்பட்டார். இடைவிடாமல் அவரிடம் விசாரணை நடாத்தப்பட்டது. டி.ஐ.டி. அலுவலகத்தில் 6க்கு 4 அளவுள்ள அறையில் பாஸ்நாயக்க அடைத்து வைக்கப்பட்டிருந்தார். பொலிதின் பையில் அவருக்கு தேனீர் வழங்கப்பட்டது. ஒரு தட்டு வெள்ளைச் சோறும், பாதி வேகவைக்கப்பட்ட முட்டையும் மட்டுமே அடிக்கடி உணவாகக் கொடுத்தனர். ஜன்னல் ஏதுமில்லாததால் அந்த அறைக்குள் வெளிச்சம் வர வாய்ப்பு இல்லை. 71 நாட்கள் இத்தகைய சுகாதாரமற்ற சூழ்நிலையைப் பொறுத்துக் கொள்ள வேண்டியிருந்ததற்கு பாஸ்நாயக்க பெரும் விலையைக் கொடுக்க வேண்டிய நிலை உருவானது. எலும்புருக்கி நோயால் தாக்கப்பட்டு, அவரது உடல் நிலை சீரழிந்தது. விடுதலை செய்யப்பட்ட பின்னரும் அவர் பல மாதங்கள்

Stodal

சிகிச்சை எடுக்க வேண்டியிருந்தது.

மோசமான மற்றும் சுகாதாரமற்ற நிலையில் அடைக்கப்பட்டிருந்த அவருக்குப் பொலிசார் மன ரீதியிலும் கொடுமை செய்தனர். பாஸ்நாயக்கவை, தொடர்ந்து காலை 5 மணிக்கு எழுப்பி இடை விடாது கேள்விகளைக் கேட்டு விசாரணை நடாத்தினர். அடைத்து வைக்கப்பட்டிருந்த காலம் முழுவதும் தனது குழந்தைகளைச் சந்திக்க அவருக்கு அனுமதி வழங்கப்படவில்லை. வாரத்துக்கு ஒரு முறை டி.ஐ.டி. அதிகாரிகள் மத்தியில், மனைவியை 10 நிமிடங்கள் மட்டுமே சந்திக்க அனுமதி வழங்கப்பட்டது. அப்போதும் அவர்களது உரையா டலை டி.ஐ.டி., அதிகாரிகள் கேட்டுக் கொண் டிருந்தனர். பாஸ்நாயக்க பிடித்து வைக்கப் பட்டிருந்தது அவரது குடும்பத்தினருக்குப் பயத்தை ஏற்படுத்தியது. குறிப்பாக பாஸ்நாயக்க விடுதலை செய்யப்பட்ட பின்னரும், அவரது 10 வயது மகளுக்கு மனோதத்துவ ரீதியில் ஆலோசனை மற்றும் சிகிச்சை அளிக்க வேண்டி வந்தது.

2007ம் ஆண்டு மார்ச் 5ம் திகதி சி.பி.இ. அலுவலகத்தில் சோதனை நடத்திய டி.ஐ.டி. அதி காரிகள், அங்கிருந்த அனைத்து நிதி ஆவணங்கள் மற்றும் அலுவலகத் தகவல் தொடர்புகளைப் பறிமுதல் செய்தனர். மறுநாள் சி.பி.இ. நிறு வனத்திற்கு வடக்கு மற்றும் கிழக்கு மாகாணங்களில் மொபைல் தொலைபேசி சேவை வழங்க



அளிக்கப்பட்டிருந்த விநியோக உரிமையை அரசு நிறுத்தி வைத்தது. பாதுகாப்புக் காரணங்களுக்காக விநியோக உரிமையை நிறுத்திவைக்கத் தொலைத் தொடர்பு ஒழுங்கு முறை ஆணையம் டயலொக்குக்கு உத்தரவிட வேண்டும் என்று பாதுகாப்புத்துறைச் செயலாளரின் ஆணையின்படி இது அமல்படுத்தப்பட்டது.

இரண்டு நாட்களுக்குப் பின்னர் 2007ம் ஆண்டு மார்ச் 7ம் திகதி, சி.பி.இ. நிறுவனம், ஸ்டாண்டர்ட் நியூஸ்பேப்பர்ஸ் பிரைவேட் லிமிடெட், கேட்வே கல்லூரி ஆகியவற்றின் கணக்குகளை ஜனாதிபதியின் உத்தரவின் பேரில் அரசு முடக்கியது. கேட்வே கல்லூரியில் கணக்குகளை முடக்கியது தவறு என்பதை உணர்ந்ததும், மறுநாளே அவை விடுவிக்கப்பட்டன. கணக்குகளை முடக்கியதன் மூலம் அந்த நிறுவனம் செய்தித்தாள்களை மூட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. சண்டே ஸ்டாண்டர்ட், மவ்பிம ஆகியவற்றின் கடைசி இதழ்கள் 2007ம் ஆண்டு மார்ச் 24ம் திகதி வெளியாகின.

ராஜபக்ஷ சகோதரர்களை விமர்சனம் செய்வதில் இருந்து தடுக்கும் நோக்கத்துடன் கூடிய சூழ்ச்சியின் விளைவாக, ஸ்டாண்டர்ட் செய்த்தித்தாள்கள், சி.பி.இ. ஆகியவற்றை நசுக்கும் நடவடிக்கையில் அரசு இறங்கியது. சண்டே ஸ்டாண்டர்ட், மவ்பிம ஆகியவை மூடப்படுவதற்கு மூன்று வாரங்களுக்கு முன்னர், அரசுத் தரப்பைச் சேர்ந்த முக்கியப் பிரமுகர் ஏற்பாடு செய்திருந்த சந்திப்பில் கலந்துகொள்ள, தனது தந்தை ஆர்.ஐ.டி. அலெஸ் மற்றும் தனது சகோதரர் ஹர்ஷா ஆகியோர் அலரி மாளிகைக்கு அழைத்துச் செல்லப்பட்டபோது, அவர்கள் இருவரும் ஜனாதிபதி மற்றும் பாது காப்புத்துறைச் செயலாளரை நேருக்கு நேர் சந்தித்தனர் என்று திரன் அலெஸ் கூறினார். அரசையும், ராஜபக்ஷ சகோதரர்களையும் விமர் சித்து மவ்பிம செய்தித்தாளில் வெளியான அனைத்துக் கட்டுரைகளின் நகல்களும் அங்கு அவர்களிடம் காண்பிக்கப்பட்டன.

"தனது நிலையை மாற்றிக் கொள்ளும்படி திரனிடம் கூறுங்கள். அவரது அனைத்துப் பிரச்சினைகளும் முடிவுக்கு வந்துவிடும்,'' என்று அங்கு அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது.

இந்தக் காலகட்டத்தில் மேலும் ஒரு அரசியல் சதித் திட்டம் அரங்கேற்றப்பட்டு, மங்கள சமரவீரவை மீண்டும் தங்களது பக்கம் கொண்டு வர அரசு முயற்சித்தது. மேற்கு மாகாண ஆளுனர் அலாவி மௌலானாவுடன் ஒரு வாகனத்தை அனுப்பி, கருத்து வேற்றுமையைப் போக்க பேச்சுவார்த்தை

நடாத்துவதற்காக அலரி மாளிகைக்கு தன்னை அழைத்து வர ஏப்ரல் மாதத் தொடக்கத்தில் முயற்சி மேற்கொள்ளப்பட்டதாக சமரவீர அப்போது தெரிவித்தார்.

இத்தகைய பேச்சுவார்த்தைகள் நடந்து கொண்டிருந்தபோது, திரன் அலெஸ் மற்றும் சி.இ.பி. மீது பகைமை நோக்கோடு நடாத்தப்பட்ட சோதனைகள் நிறுத்திக் கொள்ளப்பட்டன. நீதிமன்ற உத்தரவின்படி துஷ்யந்த பாஸ்நாயக்கவும் 2007ம் ஆண்டு மே மாதம் 8ம் திகதி விடுதலை செய்யப்பட்டார். அவர்மீது எந்தக் குற்றச்சாட்டும் சுமத்தப்படவில்லை.

மங்கள சமரவீரவை மறுபடியும் கட்சிக்குள் கொண்டுவர முயற்சிகள் நடைபெறும்போது மங்களவின் நண்பரான அலெஸ்மீது நடவடிக்கைகள் எடுத்தால் நன்றாக இருக்காது என்ற நோக்கிலேயே எல்லாம் நிறுத்தப்பட்டிருந்தன.

மே மாதம் 16ம் திகதி ராஜபக்ஷவின் சமாதான உடன்படிக்கைக்கான பூர்வாங்கப் பேச்சுவார்த்தைகளைப் புறக்கணித்து, சமரவீர பேச்சுவார்த்தையை முறித்துக் கொண்டார். மறுநாளே சி.பி.இ. அலுவலக வளாகத்துக்கு மீண்டும் டி.ஐ.டி. பொலிஸ் திரும்பி வந்தது. அலெஸ் மீதான விசாரணை மே 17ம் தேதி மீண்டும் தொடங்கி பல நாட்கள் தொடர்ந்தன. இந்த விசாரணையின் போது, அலெசின் உடலில் வீக்கம் ஏற்பட்டு உயிருக்கு ஆபத்து உருவானதால் அவர் வைத்தியசாலையில் அனுமதிக்கப்பட்டார்.

நவலோக வைத்தியசாலையில் சிகிச்சை பெற்றுவந்த நேரத்தில், 2007ம் ஆண்டு மே மாதம் 30ம் திகதி திரன் அலெஸ் கைது செய்யப்பட்டார். இதைத் தொடர்ந்து அவர் அரசு வைத்தியசாலைக்கு மாற்றப்பட்டார். அலெஸ் உடல்நிலை, அவரது உயிருக்கு ஆபத்தை ஏற்படுத்தும் வகையில் உள்ளது என்று மருத்துவர்கள் டி.ஐ.டி. அதிகாரிகளை எச்சரித்தும், மருத்துவ அறிவுரைக்கு எதிராக அவர் அரசு வைத்தியசாலைக்கு மாற்றம் செய்யப்பட்டார்.

கைது செய்யப்பட்ட 2 வாரத்துக்குள், நடுவர் நீதிமன்றம் ஜாமீன் வழங்கியதைத் தொடர்ந்து, 2007ம் ஆண்டு ஜூன் 13ம் திகதி அலெஸ் விடுதலை செய்யப்பட்டார். ஜனநாயகத்தில் சட்டத்தின் ஆட்சி நிலை நாட்டப்பட வேண்டும் என்று எதிர்பார்க்கப்படும் வேளையில், அரசால் தான் மிகவும் மோசமாக நடாத்தப்பட்டதாகவும், மனித உரிமைகள் மீறப்பட்டதை உறுதி செய்ய வேண்டும் எனவும் திரன் அலெஸ் மற்றும் சி.பி.இ. நிறுவனம் 5 அடிப்படை உரிமைகள் மனுக்களை உயர் நீதிமன்றத்தில் காவல்துறையினர் மற்றும் அரசு அதிகாரிகளுக்கு எதிராகத் தாக்கல் செய்தது.



திரன் அலெஸ் மற்றும் அவரது நிறுவனம் மற்றும் அவரது செய்தித்தாள்களுக்கு வருந்தத்தக்க வகையில் துன்புறுத்தல் தொடங்கி இரண்டு ஆண்டுகளாகின்றன. சட்டத்தின் அடிப்படையில் அரசு சுமத்தியுள்ள 2 குற்றச்சாட்டுகளும் இலங்கையில் செல்லத்தக்கத்தல்ல. திரன் அலெஸ் மற்றும் அவரது நிறுவனத்துக்கு அரசு தொடர்ந்து தொல்லை கொடுத்து வந்ததை உயர்நீதிமன்றம் கடுமையாக விமர்சனம் செய்தது.

இந்த மொத்தச் சம்பவங்கள் பற்றிய தகவல்கள் உலகளவில் வெளியானதைத் தொடர்ந்து கண்டனங்களும் எழுந்தன. சர்வதேசப் பொதுமன்னிப்பு அமைப்பு, மனித உரிமைகள் கண்காணிப்பகம், ஆசிய மனித உரிமை ஆணையம், ஊடகவியலாளர்களைப் பாதுகாக்கும் குழு மற்றும் சர்வதேச ஊடகவியலாளர்கள் கூட்டமைப்பு ஆகியவை ஸ்டாண்டர்ட் செய்தித்தாள்கள் மூடப்பட்டது மற்றும் திரன் அலெஸ் கைது ஆகியவற்றுக்கும், மனித உரிமைகள் மற்றும் ஊடகச் சுதந்திரம் ஆகியவற்றை மதிக்காமல் அரசு நடந்து கொண்ட சம்பவங்கள் தொடர்பாகவும் கண்டனம் தெரிவித்தனர். இந்த நிலையை அரசு சரி செய்ய வேண்டும் என்று அவர்கள் கோரினர்.

குற்றச்சாட்டுகள் ஏதும் இன்றி திரென் அலெஸ் கைது செய்யப்பட்டது பற்றி அமெரிக்க வெளியுறவுத்துறை மனித உரிமைகள் அறிக்கையிலும் குறிப்பிடப்பட்டுள்ளது (யு.எஸ் கன்ட்ரி ரிப்போர்ட் ஒன் எச்.ஆர்.பிராக்டீசஸ் 2007)

